# முன்னேற்றப் பாதை



உள்துறை அமைச்சர்
கக்கன்





தமிழ்ப்பண்ணை

# முன்னேற்றப் பாதை



உள்துறை அமைச்சர்

## திரு. கக்கன்ஜி அவர்கள்



தமிழ்ப்பண்ணை
சென்னை - 17.

# காணிக்கை

உடல் எனது இயக்கம், உயிர் எனது கொள்கை என்று தினமும் காங்கிரஸ் இயக்கத்திற்கே அரும் பாடுபட்டு மறைந்த மாவீரன் **அஜீஸ்** அவர்களுக்கு இந்த நூலைக் காணிக்கை ஆக்கு கின்றோம்.

சின்ன அண்ணாமலை.

# பதிப்புரை

'முன்னேற்றம்' என்ற வார்த்தையைக் கேட்கும் பொழுதே சொல் இனிக்கின்றது! நடை முறையிலே கண்டு விட்டால் தேனின் சுவை தெரிகின்றது! எதைச் செய்தாலும் முன்னேறத்தான் முயலுகிறுன் மனிதன்! பின் செல்ல எவனும் விரும்புவதில்லே! முன் சென்ருல் போற்றுவார்கள்! பின் சென்ருல் இகழ்வார்கள்! இது பொது நியதி!

ஆனல் பின்னேற்றத்தில் இருந்து தான் முன்னேற்றம் பிறக்கின்றது என்று தெரிந்தும் தெரியாதது போல் உள்ளது மனித நெஞ்சம் ஒன்றுதான்! நெஞ்சம் முன்னேறச் சொல்லுகின்றது! நேர்மை பின்னே தள்ளுகின்றதே! என்று சில பேர் முணு முணுப்பார்கள்! நேர்மை பிசகினல் தான் முன்னேற்றம் உண்டு என்று எண்ணுவோருக்கு நியாயத்திலும் முன்னேற்றம் உண்டு என்று தெரியாமல் போய் விட்டது என்ன காரணத்தினுலோ?

உள் துறை அமைச்சர் திரு. கக்கன்ஜி அவர்கள் காட்டுகின்ற முன்னேற்றம், நாட்டின் முன்னேற்றம். வாழ்க்கையின் முன்னேற்றம். நியாயத்திலும் நேர்மையிலும் தோன்றுகின்ற முன்னேற்றம்.

நாட்டின் விடுதலேக்காகப் பாடுபட்டு, சிறைப்பட்டு, குருதி சிந்தி, எண்ணற்ற தியாகங்களேச் செய்த திரு. கக்கன்ஜி, தான் கண்ட முன்னேற்றப் பாதையைச் சொல்லுகின்ருர்.

அமைதியான பேருள்ளம் கொண்ட அமைச்சர் அவர்களின் எழுத்துக்கள் அமைதியாக இருந்தாலும், சிந்தனேயைக் கிளறுகிறது என்பதில் ஐயமில்லே!

அன்பன்

சின்ன அண்ணுமலே.

தியாகராயநகரம்
சென்னே-17.

# நவீன முறை விவசாயம்

விவசாயம் உண்மையில் மிகப் பழமையான விஞ்ஞானமாகும். இத் தொழில் வேகமாக வளர்ச்சி அடைந்திருக்கிறது. இன்னும் வளர்ந்து வருகின்றது. தினம் தினம், புதிய புதிய ஆராய்ச்சிகள் நடந்தபடி உள்ளன. அந்த ஆராய்ச்சிகளின் விளைவாக உற்பத்தியைப் பெருக்குவதற்கும், உற்பத்திச் செலவுகளைக் குறைப்பதற்கும் புதுப் புது முறைகள் கண்டு பிடிக்கப் படுகின்றன. ரசாயன உரங்கள், நவீன விவசாயக் கருவிகள், பயிர் பாதுகாப்பு மருந்துகள், பொறுக்கு விதைகள் முதலியன எல்லாம் குறைந்த காலத்தில் அதிகமான மகசூல் எடுக்க உதவுகின்றன. இவையெல்லாம் ஆராய்ச்சியின் விளைவாகக் கிடைத்தவை ஆகும். உற்பத்தியைப் பெருக்க வேறு சாதனங்கள் குறித்து மேலும் ஆராய்ச்சிகள் நடந்தபடி உள்ளன. இந்த ஆராய்ச்சியின் பலன்கள் எல்லாம் குடியானவர்களுக்குக் கிடைக்கும்படி செய்ய வேண்டும். குடியானவர்கள் பொதுவாக மாறுதல்களை விரும்புவதில்லை. புதுமுறைகளில் நம்பிக்கையின்மை காரணமாக, நவீன முறைகளை அவர்கள் மேற்கொள்ள

விரும்புவதில்லை. ஆராய்ச்சிகளின் பலன்களை அவர்கள் உணர்ந்து அப்பலன்களைப் பெறும் படியாக அவர்கள் மனப் போக்கை மாற்றுவது எப்படி? இந்த முறையில்தான் விஸ்தரிப்பு வேலை முறைகள் மிகவும் உபயோகமாக இருக்கின்றன.

## விஸ்தரிப்பு வேலை

தமிழ் நாட்டில் வேளாண்மைத் துறையானது ஒரு குறிப்பிட்ட அளவில் விஸ்தரிப்பு வேலையை நீண்ட காலமாகவே செய்து வருகின்றது. ஆனால், 1952-ல் இந்தியாவில் சமுதாய அபிவிருத்தித் திட்டங்கள் ஆரம்பிக்கப் பட்ட போதுதான், விஸ்தரிப்பு வேலை முறைகள் பரவலாக உணரப் பட்டன.

நல்ல முறையில் வளர்ச்சி அடைந்த ஆராய்ச்சிப் பிரிவுடன் கூட, விவசாய இலாகாவானது விஸ்தரிப்பு வேலை நிபுணரின் கீழ் விஸ்தரிப்பு வேலைப் பிரிவு ஒன்றையும் வைத்துள்ளது. இந்த விஸ்தரிப்புப் பிரிவானது, ஆராய்ச்சிப் பிரிவுக்கும், குடியானவர் களுக்கும் இடையே பிணைப்பை ஏற்படுத்துகிறது. விஸ்தரிப்பு வேலையில் விஸ்தரிப்பு நிபுணரின் அலுவல்கள் தவிர்த்து, தகவல் அதிகாரியின் பணியும் முக்கியமானது ஆகும். இந்த இரு தரப்பாரும் சேர்ந்து, ஆராய்ச்சிகளின் முடிவுகளை, விவசாயிகள் எளிதாக உணர்ந்து எளிதாக அனுசரிக்கும் வண்ணம் அந்த முறைகளைப் பரப்ப வேண்டியுள்ளது. இந்தப் பணியில், அவர்களுக்கு நல்ல பயிற்சி ஏற்படுத்து வதற்காக விஸ்தரிப்புப் பிரிவு, தகவல் பிரிவு ஆகியவைகளைச் சேர்ந்த அலுவலாளர்களுக்கு

குறிப்பிட்ட துறைகளில் குறித்த காலக் கிரமப்படி பயிற்சிகள் அளிக்கப் படுகின்றன.

சினிமாப் பட முறையில் விளக்கம், மறு பயிற்சிகள், கருத்தரங்குகள், அலுவலர் கூட்டங்கள் ஆய்வுக் குழுக்கள் முதலியவற்றை நடத்துவது ஆகியவைகளிலும் கவனம் செலுத்தப்பட்டு பயிற்சி அளிக்கப் படுகின்றது.

## நவீன முறைகள்

குடியானவர்களுக்கு நவீன முறைகளை எடுத்துறைப்பதில், விஸ்தரிப்பு வேலைகள் தான் கருவி சாதனமாக இருந்து உதவுகின்றன. பயன் படுத்தப் படும் முறைகள் மனம் கவரத் தக்க முறையில், ஆர்வத்தை வளர்க்கக் கூடிய வகையில் இருக்க வேண்டும். பயன் படுத்தப்படும் முறைகள், அந்தந்த ஊர் நிலைமைக்கும், வட்டார நிலவரங்களுக்கும் அனுசரணையாக இல்லாமல் இருக்குமானால், அந்த முறைகளால் பலன் ஏற்படாது.

குடியானவர்கள் தங்கள் தேவைகளை உணர்வதற்கு வழிகாட்டும் படியாக இந்தமுறைகள் இருக்க வேண்டும். இந்த முறைகள் பரவலாக அனுசரிக்கக் கூடியதாகவும்,வட்டார நிலைமைகளுக்கேற்ப வளைந்து கொடுக்கும் தன்மை உள்ளதாகவும், ஜனநாயக முறைக்கு ஏற்பவும் இருக்க வேண்டும். சிறந்த முறையில் பலன் காண்பதற்காக கூடுமானவரை அங்காங்கே உள்ளூர் தலைவர்களையும், ஏற்கனவே உள்ள ஸ்தாபனங்களையுமே பயன் படுத்திக் கொள்ள வேண்டும். பயிற்சி பெற்ற நிபுணர், புதிய விஸ்தரிப்பு முறைகளில் அவர்களுக்கு வழிகாட்டிச் செல்ல வேண்டும் என்பதை விளக்க வேண்டியது இல்லை.

## பல்வேறு சாதனங்கள்

விஸ்தரிப்பு வேலையில் பல் வேறு சாதனங்கள் கையாளப் படுகின்றன. பேச்சு, எழுத்து, சினிமாப் படக்கருவிகள் முதலியன பயன்படுத்தப் படுகின்றன. ஆராய்ச்சி நுட்ப முறைகளைப் பரப்புவதற்காக, பண்ணைக்கு அழைத்துச் செல்லல், குழுத் தொடர்புகள் ஏற்படுத்துதல், செய்முறைப் பயிற்சி, பொருட் காட்சி, சுற்றுலா, மகிழ்ச்சிப் பயணம், ரேடியோ, சினிமா நிகழ்ச்சிகள், புத்தகங்கள், நாடகம், பாட்டு போன்ற கலை நிகழ்ச்சிகள் முதலியன பயன் படுத்தப் படுகின்றன. இளைஞர் மன்றங்கள் தற்சமயம் விஸ்தரிப்பு வேலைகளில் மிகவும் பயன் படுகின்றன.

எல்லா விஸ்தரிப்பு வேலைகளின் முடிவான நோக்கம் ஒன்றே. ஆய்வுக் கூடங்களில் நடந்த ஆராய்ச்சிகள் மூலம் சமுதாயம் பயனடைய வேண்டும். உற்பத்தி முறைகளை அபிவிருத்தி செய்தும், உற்பத்திச் செலவுகளைக் குறைத்தும் சமுதாயம் லாபமடைய வேண்டும். எனவே குடியானவர்கள் தங்களுடைய பாரம்பர்யமான முறைகளை மாற்றிக் கொள்ள வேண்டும் என்பதை எடுத்துக்காட்ட இந்த முறைகள் பெரிதும் பயன்படும்.

முறை சரியானதாக இருப்பது மட்டும் போதாது. விஸ்தரிப்பு வேலை அலுவலரும் வேலைக் கேற்ற சரியான நபராக இருந்து சரியாக செயல் பட்டால் தான் விரும்பியபடி பலன் கிடைக்கும். அவர் தாம் வேலை செய்யும் வட்டார நிலவரம் பற்றியும், வட்டார மக்கள் குறித்தும் நன்கு அறிந்தவராக இருக்க வேண்டும். மக்களுடைய நலன்கள், தேவைகள் குறித்துத் தெளிவாகத் தெரிந்து இருக்க வேண்டும்.

மதிநுட்பம், பொறுமை, ஆற்றல், விஷயஞானம் படைத்தவராக இருக்க வேண்டும். தமது நம்பிக்கையை—சொல்லை செயல் படுத்த வல்லவராக இருக்க வேண்டும். இவை எல்லாவற்றுக்கும் மேலாக, குடியானவர்களின் மனப்பாங்கை புதிய துறைகளுக்கு மாற்ற வல்லவராக அதற்கான தன்மை உள்ளவராக இருக்க வேண்டும்.

# விவசாய முன்னேற்றம்

நமது மாநிலத்தின் அடிப்படைத் தொழில் விவசாயம் ஆகும். தேசிய வருமானம், தனி நபரின் வருமானம் ஆகியவைகளை பெருக்குவதிலும், மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாத உணவுப் பொருள்களையும், தொழில் வளர்ச்சிக்கான மூலப்பொருள்களையும் அளிப்பதில் விவசாயம் முக்கியமான பங்கு வகிக்கிறது. இரண்டு ஐந்தாண்டுத் திட்டங்கள் முடிவு பெற்று மூன்ருவது திட்டமும் முடியும் தறுவாயில் உள்ளது. ஆகவே உணவுப் பொருள்கள், வியாபாரப் பொருள்கள் உற்பத்தி எந்த அளவுக்கு அதிகம் ஆகி இருக்கின்றன என்பதையும் விவசாய உற்பத்தி அதிகரிப்பில் மற்ற வேலைத் திட்டங்கள் எந்த அளவுக்குப் பங்கு கொண்டுள்ளன என்பதைப் பற்றியும் ஆராய்ந்து பார்ப்பது பொருத்தம் உடையது ஆகும்.

இரண்டாவது ஐந்தாண்டு திட்ட இறுதியில் 53.12 லட்சம் மெட்ரிக் டன் உணவு தானியம் உற்பத்தி செய்யப்பட்டதாக மதிப்பிடப் பட்டுள்ளது. மூன்ரு வது திட்டத்தை வகுக்கும் போது உணவுக்காகவும்,

விதைகளுக்காகவும் மட்டும் அல்லாமல், பாதகமான பருவ நிலையையும் கருத்தில் கொண்டு உணவு உற்பத்தித் திட்டம் வகுக்கப்பட்டது.

## விவசாய உற்பத்திக்குழு

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்துள்ள வேலைத் திட்டங்களை முடிவு செய்ய விவசாய உற்பத்திக் குழு ஒன்று அமைக்கப் பட்டது. இக்குழு, சாதகமான பருவ காலத்திலும், பாதகமான பருவ காலத்திலும், உற்பத்தி அளவு வேறு படுவது பற்றி பரிசீலனை செய்து 10 லட்சம் மெட்ரிக் டன் வேறு பாடு இருக்கும் என்று மதிப்பிட்டது.

இந்த வேறு பாட்டுக்கும் சேர்த்து வகை செய்வது விரும்பத்தக்கது என்று கருதப் பட்டது. எனவே, பாதகமான பருவ நிலையிலும் குறைந்த அளவு 60.5 லட்சம் மெட்ரிக் டன் உணவு உற்பத்தி செய்ய முடியு மென்று மதிப்பிடப்பட்டு, மூன்ருவது திட்ட இலக்கு சுமார் 70 லட்சம் மெட்ரிக் டன் என்று நிச்சயிக்கப் பட்டது. 1960—61ல் 53.15 லட்சம் மெட்ரிக் டன் உணவு உற்பத்தி செய்யப் பட்டது என்பது இங்கே குறிப்பிடத் தக்கது ஆகும்.

## கூடுதல் உற்பத்தி

பெரிய பாசனம், சிறுபாசனம், மண்வளப் பாது காப்பும், நிலமீட்பும், தரமான விதைகள், ரசாயன உரங்கள்—தழை உரம், மற்ற உள்ளூர்வகை எரு வகைகள் ஆகியவை மூலம் 16.50 லட்சம் மெட்ரிக் டன் உணவு தானிய உற்பத்தி கூடுதலாகச் செய்யவும் உத்தேசிக்கப் பட்டுள்ளது.

பரம்பிக்குளம்-ஆளியாறு திட்டம்,வைகைதிட்டம்• புதிய கட்டளை மேல் மட்டக் கால்வாய்த் திட்டம், புள்ளம்பாடி கால்வாய்த் திட்டம், வீடூர் நீர்த் தேக்கத் திட்டம் நெய்யாற்றுத் திட்டம்,பாலாறு அணைக்கட்டு, சாத்தனூர் திட்டம், இராமநதித் திட்டம் ஆகிய திட்டங்கள் மூலம் 2.08—லட்சம் ஏக்கர் புதிய நிலங்களைப் பாசனத்தின் கீழ்க் கொண்டு வருவதே மூன்றுவது திட்டத்தின் நோக்கமாகும். பரம்பிக் குளம்—ஆளியாறு திட்டம், நெய்யாறு திட்டம், இராமநதித் திட்டம் ஆகியவை நீங்கலாக மற்ற திட்டங்கள் அனைத்தும் முடிக்கப்பட்டு அவை முழு அளவுக்குப் பயன் படுத்தப் படும்.

மூன்றுவது திட்டத்தில் புதிதாக 2.4—லட்சம் ஏக்கர் நிலத்திற்குப் பாசன வசதிகள் ஏற்படுத்த வேண்டு மென்றும், 4.69 லட்சம் ஏக்கர் நிலத்தில் ஏற்கனவே உள்ள பாசன வசதிகளை அபிவிருத்தி செய்ய வேண்டும் என்றும் நிச்சயிக்கப்பட்டது. ஆனால்,1963—64 வரை 1.64—லட்சம் ஏக்கர் நிலம்தான் புதிதாகப் பாசனத்தின் கீழ் கொண்டு வரப்பட்டது. 2.8—லட்சம் ஏக்கரா நிலத்தில் பாசன வசதி அபிவிருத்தி செய்யப்பட்டது. 1965—66 முடிவுக்குள் 1.22—லட்சம் ஏக்கர் நிலம் புதிதாகப் பாசனத்தின் கீழ்க் கொண்டு வரப்படும் என்றும், 1.254—லட்சம் ஏக்கர் நிலத்தில் பாசன வசதி அபிவிருத்தி செய்யப் படும் என்றும் எதிர்பார்க்கப்படுகிறது. ஆகவே மூன்றுவது ஐந்தாண்டு திட்ட முடிவில் திட்ட இலக்கான 1.83—லட்சம் மெட்ரிக் டன் அதிக உற்பத்தியைவிட 1.94—லட்சம் மெட்ரிக் டன் அதிக உற்பத்தி ஆகும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

## பாசன வசதி

மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்தில், விசேஷ சிறு பாசனத் திட்டத்திற்காக ரூ. 800—லட்சம் ஒதுக்கப் பட்டுள்ளது. திட்ட கால அளவில் 3,500 வேலைகளை முடிக்க வேண்டுமென்று திட்ட மிடப் பட்டுள்ளது. இந்தப் பாசன வேலைகளைப் பூர்த்தி செய்வதன் மூலம் 4.53—லட்சம் ஏக்கரா கொண்ட தற்போதைய ஆயக் கட்டுக்கு உறுதியான பாசன வசதி கிடைப்பதுடன், 47,000 ஏக்கர்களுக்குப் புதிய பாசன வசதி கிடைக்கும். அத்துடன் 1.72 மெட்ரிக் டன் கூடுதலாக உணவு தானியங்கள் உற்பத்தி ஆகும். மூன்ருவது திட்டத்தின் கீழ் 1964-ம் ஆண்டு இறுதி வரை ரூ.803.97 லட்சம் செலவிடப் பட்டது. 2,891 வேலைகள் பூர்த்தி செய்யப் பட்டன. இதன் விளைவாக 96,730 ஏக்கர் புதிய நிலங் களுக்குப் பாசன வசதி அளிக்க முடிந்தது. அத்துடன் 2,97 லட்சம் ஏக்கர் கொண்ட தற்போதைய ஆயக் கட்டுக்கு உறுதியான பாசன வசதி அளிப்பதன் மூலம் சுமார் 85,000 மெட்ரிக் டன் உணவு தானியங்கள் அதிக உற்பத்தி செய்யப் படும்.

## பாசன ஏரிகள்

பாசன ஏரிகளைத் தூறு வாரிப் பண் படுத்துதல் விவசாய வளர்ச்சியின் மற்றொரு சாதனமாகும். ஏரிகள் மண் ணடித்துப் போவதனல், முழுவதுமோ அல்லது அவற்றின் ஒரு பகுதியோ பயனற்றுப் போயிருக்கும். அத்தகைய ஏரிகளின் உட்புறத்தில் தூர் வாருவதன் மூலமும், அவற்றின் முழு ஏரி மட்டத்தை உயர்த்துவதன் மூலமும் அவற்றைப் பழைய நிலைக்குக் கொண்டு வரலாம்.

இதற்கான திட்டத்தின் கீழ் ஏரியின் மண்ணடிக் கப்பட்ட பகுதி ஆழப் படுததப்படும். வெளியே அகற்றப் பட்ட மண், ஏரி எதிர் வயில் அமிழ்ந்து போன நிலங்களை மீட்கப் பயன் படுத்தப் படுகிறது. ஏரி மீண்டும் பழைய நிலையை அடைந்து பயன் படுவதுடன் மீட்கப் பட்ட நிலங்களும், சாகுபடியின் கீழ்க் கொண்டு வரப்படும், புறம் போக்கு நிலங்கள், தழை உர உற்பத்திக்காகவும், விறகு மரங்களை நடு வதற்காகவும் பயன் படுத்தப் படும்.

ஏரியின் கொள் அளவு பழைய நிலையை அடைந்து விடுவதால், அந்த ஏரியின் கீழ் உள்ள பதிவான ஆயக் கட்டில் பாசன வசதி கிடைக்காத நிலங் களுக்கு மீண்டும் பாசன வசதி கிடைக்கும். இத் திட்டம், இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ் ஒரு முன்னோடித் திட்டமாக மேற் கொள்ளப் பட்டது. முதற்கண் இது செங்கற்பட்டு மாவட்டத்தில் கொண்டு வரப்பட்டது. பின்னர், அது வட ஆற்காடு, தென் ஆற்காடு, இராமநாதபுரம் மாவட்டங்களிலும், திருச்சிராப்பள்ளி மாவட்டத்தைச் சேர்ந்த புதுக் கோட்டை டிவிஷனிலும் விஸ்தரிக்கப் பட்டது.

இத்திட்டம் இப்போது இம்மாநிலத்தின் எஞ்சிய பகுதிகளுக்கும் நீட்டிக்கப் பட்டுள்ளது

### கிணறு வசதி

அதிக உணவு உற்பத்தித்திட்டத்தின் கீழ்தனியார் துறைக்கு ஊக்கம் அளிப்பதற்காக 1958—58-ல் புதிய பாசனக்கிணறுகளை வெட்டுவதற்குக் கடன் வழங்கும் திட்டம் மீண்டும் கொண்டு வரப்பட்டது. கடனில் ஒரு பகுதியை உதவித்தொகையாக மாற்றிக்கொள்ளலாம். இது, திட்டத்தில் சேர்ந்த வேலையாகும். இதற்கு

இந்திய அரசாங்க உதவியும் கிடைக்கும். இத்திட்டத்தின் கீழ் ஒவ்வொரு கிணற்றிற்கும் ரு 2000—க்கு மேற் படாத கடன் வழங்கப்படும்.

கோயம்புத்தூர் மாவட்டம், கோபிச் செட்டி பாளையம் தாலுகா தாளவாடி பிர்க்காவில் உள்ள பகுதிகள் நீங்கலாக மற்ற எல்லாப் பகுதிகளிலும் அக் கடன் வழங்கப்படும். தாளவாடி பிர்க்காவில் உள்ள பகுதிகள் மிகவும் பின் தங்கிய நிலையில் உள்ளதால், அங்கு கிணறு ஒன்றுக்கு ரு 3000 வரையில் கடன் வழங்கப்படுகிறது. கடன் இரண்டு சம தவணைகளில் வழங்கப்படுகிறது. முதல் தவணை, கடன் அனுமதிக்க படும்போது வழங்கப்படுகின்றது. சம்மந்தப்பட்ட நபர் முதல் தவணைத் தொகையை முழுவதும் உபயோகித்த பின்பு இரண்டாவது தவணை வழங்கப் படும். நிர்ணயிக்கப்பட்ட விதத்தில் கிணற்றைப் பூர்த்தி செய்த பிறகு கிணற்று வேலையின் செலவில் 25 சதவிகிதம் (அதிக அளவு ரு. 500க்கு உட்பட்டு) உதவித் தொகையாகக் கருதப்படுகிறது.

1961—62 முதல் 1963—64 வரை புதிய கிணறு உதவித்தொகை திட்டத்தை நிறைவேற்றுவதில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

1963—64-ல், 2,998 கிணறுகள் பூர்த்தியானதாக அறிவிக்கப்பட்டன. கிணறுகள் வெட்ட வழங்கிய தொகை ரு.1,11.29 லட்சம். இதனால் பயனடைந்த பரப்பளவு 2,998 ஏக்கர். உற்பத்தி அதிகரிப்பு 1,499 டன்கள் ஆகும். 1965-ம் ஆண்டு ஜனவரி முடிய ரு. 93.39—லட்சம் கடன் வழங்கப்பட்டது. 1,699 கிணறுகள் பூர்த்தியானதாக அறிவிக்கப்பட்டன.

## இறவைப் பாசனம்

இறவைப் பாசனத்திற்காக எண்ணெய் எஞ்சின் களையும், மின்சார மோட்டார் பம்பு செட்டுகளையும் வாங்க குடியானவர்களுக்குக் கடன்கள் வழங்கப் படுகின்றன. இத்திட்டம் முக்கியமாக வட்டார வளர்ச்சிப் பணியாளர்கள் மூலமாகவும், விவசாயத் துறை மூலமாகவும் நிறைவேற்றப் பட்டு வந்தது. 1963-ஏப்ரல் 1-ம் தேதி முதல் வட்டார வளர்ச்சி அதிகாரிகள் மூலமாக ரெவின்யூ துறையால் அது நிறைவேற்றப் பட்டு வருகிறது.

இத் திட்டத்தின் படி ரூ. 40 . 04 வழங்கப்பட்டது. பயனடைந்த பரப்பளவு 10,470 ஏக்கர் ஆகும்.

துளைக் கிணறுகளை வெட்டுவதன் மூலமாகவும், வாடகைக் கொள்முதல் திட்டத்தின் கீழ் நீர் இறைக்கும் இயந்திரங்களை வழங்குவதன் மூல மாகவும், பூமிக்கடியில் உள்ள நீர் ஊற்றுகளை பயன் படுத்த வகை செய்யப்படுகிறது. இதற்காக ஒவ்வொரு விஷயத்திலும், ரூ. 8000 வரையில் கடன் வழங்கப் படுகிறது. மேலும், மொத்த செலவில் 10 சதவீதத் திற்குச் சமமான ஒரு தொகை உச்ச அளவு ரூ.2500-க்கு உட்பட்டு உதவித் தொகையாக வழங்கப் படுகிறது.

## வடிமுனைக் கிணறுகள்

திட்டத்தின் கீழ் விவசாய காரியங்களுக்காக மணற் பாங்கான பகுதிகளில் சாத்தியமான இடங் களில் நீர் இறைப்பதற்காக வடிமுனைக் கிணறுகள் வெட்டப் படுகின்றன. இந்த பம்பிங் இயந்திரங்களை

வாங்குவதற்காக நபர் ஒவ்வொருவருக்கும் ரூ. 3,000 வரை கடன் வழங்கப்படும். இத்தொகை ஐந்து சம தவணைகளில் வசூலிக்கப்படும்.

ஆற்றுப் படுகைகளில் கிணறுகளைத் தோண்டி அதிக சக்தியுடைய எண்ணெய் இன்ஜின்களை அல்லது மின்சார பம்புகளைக் கொண்டு நீர் இறைத்து பாசன வசதிசெய்து கொடுக்க ஒரு திட்டம் உள்ளது. இதன் மூலம் 50 ஏக்கருக்குக் குறையாமல் தொகுதி யாக உள்ள நிலங்களுக்குப் பாசன வசதி செய்து கொடுக்கப்படும்.

## மண் வளப் பாதுகாப்பு

மண்வளத்தைப் பாதுகாப்பதும் நமது திட்டங் களில் ஒன்றாகும். மூன்றாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் சமவெளிகளில் 3.20 லட்சம் ஏக்கரிலும், மலைப் பகுதியில் 10,000 ஏக்கரிலும் இத்திட்டத்தை நிறை வேற்ற உத்தேசிக்கப்பட்டுள்ளது. நீலகிரியில் சரிவுப் பாத்தி அமைத்ததின் விளைவாக, சராசரி 22.3 சதவீதம் உருளைக்கிழங்கு மகசூல் அதிகரித் துள்ளது. நில வளைவுக்கேற்ப கரை கட்டியதோடு நவீன முறையில் பண்படுத்திப் பண்ணைச் சாகுபடி மேற்கொண்டதன் பலனாக, மகசூல் அதிகரித்துள்ளது.

தரமான மூல வித்துக்கள், முதல் நிலை விதைகள் இரண்டாம் நிலை விதைகள் ஆகியவற்றின் உற்பத்தி யைப் பெருக்குவதும், மூன்றாண்டு கால அளவுக்குள் முறை வாரியாக நெல், தினைவிதைகளை வினியோகம் செய்வதும் நல்லமுறையில் பலனளிப்பவை ஆகும். மூல வித்துக்கள் அரசாங்க விதைப்பண்ணையில் பெருக்கப் படுகிறது.

இரண்டாம் நிலை விதைகளை உற்பத்தி செய்து வழங்கும் பொறுப்பு பஞ்சாயத்திடம் ஒப்படைக்கப் பட்டுள்ளது. மூலவிதைகளை உற்பத்தி செய்ய பஞ்சாயத்து, கிராம சகாயக்குகளை நியமிக்கிறது. மேலும் பஞ்சாயத்துக்கள் கிராம சகாயக்குகள் உற்பத்தி செய்யும் இரண்டாம் நிலை விதைகளைப் பெறுவதற்காக குடியானவர்களை நியமிக்கிறது.

நெல் மூல விதைகளைப் பொறுத்தவரை, மூன்ருவது திட்டத்தின் முதல் மூன்று ஆண்டுகளில் நிச்சயிக்கப்பட்ட இலக்காகிய 2,500 மெட்ரிக் டன் னுக்கு மேல் அல்லது அந்த அளவுக்கு நெல் மூல விதை உற்பத்தி செய்யப்பட்டது.

## ரசாயன உர வகைகள்

ரசாயன உர வகைகளை விநியோகிப்பதற்கான திட்டம் அரசாங்க வர்த்தகத் திட்டமாக நம் மாநிலத் தில் நிறைவேறறப்படுகிறது.

உரம் போட்டு பயிரிடுவது சம்பந்தமான செயல் முறை விளக்கம் இப்போது தானிய வகைகளுக்கும், நிலக்கடலை, பருத்தி, கரும்பு, வாழை, மரவள்ளிக் கிழங்கு, பருப்பு வகைகள், மிளகாய், முட்டைகோஸ் போன்ற பயிர்களுக்கும் செய்து காட்டப்படுகிறது.

எல்லா வட்டாரங்களிலும் கிராம எருக்குழி வள உற்பத்தி சிறப்பாக கவனம் செலுத்தப்பட்டு வளர்ச்சி பெற்று வருகிறது. நிர்ணய அளவுக்குழி ஒவ்வொன் றுக்கும் முதல் நிரப்புதலுக்கு ரு 6-ம், அதை அடுத்துத் தொடர்ந்து நிரப்புவதற்கு ஒவ்வொரு குழிக்கும் ருபாய் மூன்றும் ஒவ்வொரு குடியானவருக்கும் இப்போது உதவிப்பணம் அளிக்கப்படுகிறது. பஞ்சா

யத்துக்கள் நிர்வகிக்கும் குழிவளக் கூடங்களுக்கு ஒவ்வொரு குழிக்கும் அரசாங்கம் அளித்து வந்த நான்கு ரூபாய் மானியம் ஆறு ரூபாயாக உயர்த்தப் பட்டுள்ளது.

## எருக் குழி திட்டம்

நகர்ப்புறக் குழி எருத்திட்டம் 72 நகராட்சிகளிலும், 311 அறிக்கையிடப்பட்ட பஞ்சாயத்துக்களிலும் செயல்படுத்தப்பட்டு வருகிறது. சென்னை மா நகராட்சி, மேட்டூர், கோடைக்கானல், பவானிசாகர், நெய்வேலி, குற்றாலம் ஆகிய இடங்களில் இத்திட்டம் செயல் பட்டு வருகிறது.

பயிர்களுக்கு உண்டாகும் பூச்சித் தொல்லைகளையும், நோய்களையும் கட்டுப்படுத்துவதற்கான திட்டம், இம்மாநிலத்தில் 1949-ம் ஆண்டு முதல் செயல் பட்டு வருகிறது. பயிர்களைப் பீடிக்கும் பூச்சிகளையும், நோய்களையும் கட்டுப் படுத்த ரசாயன ஏற்பாடுகளை உழவர்கள் கையாளச் செய்வது அவசியமாகும்.

இதற்கான திட்டத்தின் கீழ், உணவுப்பயிர்களுக்காக 25 சதவிகிதம் சலுகையில் பூச்சி கொல்லி மருந்து விற்கப்படுகின்றன. பருத்தி எண்ணெய் வித்துக்கள், கரும்பு போன்ற உணவுப் பயிரல்லாத மற்றவைகளுக்கும் 50 சதவீதக் குறைந்த விலைக்குப் பூச்சிக் கொல்லிகள் விற்கப்படுகின்றன.

## பூச்சி கொல்லி மருந்துகள்

உணவுப் பயிர்களுக்குப் போடும் பூச்சிக்கொல்லி மருந்துகளின் விற்பனைக்குக் கொடுக்கப்படுகிற உதவித் தொகையை இந்திய அரசாங்கம் ஏற்றுக்

கொள்கிறது. உணவுப் பயிரல்லாத பிறவற்றிற்கு வழங்கப்படும் தொகையை மாநில அரசாங்கமும், இந்திய அரசாங்கமும் பகிர்ந்து கொள்கின்றன.

நச்சுத் தன்மையுள்ள பூச்சி மருந்துகளை வழங்கும் வேலை கூட்டுறவு சங்கங்களிடம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. கையினுல் இயக்கும் மருந்து பீச்சாங் குழல்களையும், மருந்து தெளிக்கும் கருவிகளையும் வாங்குவதற்கு உழவர்களுக்கு அவற்றின் விலையில் 50 சதவீதம் உதவித் தொகை வழங்கப்படுகிறது.

வாணிபப் பயிர்களின் அபிவிருத்தி விஷயத்தில் விசேஷ கவனம் செலுத்தப்பட்டுள்ளது. மூன்ருவது, திட்ட இறுதியில் பருத்தி 5.20 லட்சம் பேல்களும், கரும்பு (வெல்லம்) 7.75 லட்சம் மெட்ரிக் டன்களும், எண்ணெய் வித்துக்கள் 13.94 லட்சம் மெட்ரிக் டன் களும் உற்பத்தி செய்யப்படும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.

### புதிய ரக பருத்தி

கன்னியாகுமரி மாவட்டத்தில் "சீ ஐலண்டு ஆண்ட்ரூஸ்" என்ற ஒருவகைப் பருத்தியை அதற்குப் பொருத்தமான பகுதிகளில் சாகுபடி செய்ய ஆராய்ச்சி நடத்தப்படுகின்றன. கோயம்புத்தூரில் "பிர்காம்" நிலையத்தில் ரஷ்யாவில் இருந்து கொண்டு வரப்பட்ட பருத்தி வகைகளைப் பயன்படுத்தித் தீவிர ஆராய்ச்சி செய்யப்பட்டது. இந்த ஆராய்ச்சியின் மூலம் புது வகை பருத்தி ஒன்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இதன் பெயர் "பிர்காம் ரஷ்ய ரகம் 72". இந்த ரகம் மிகுந்த பொருளாதார மதிப்பு வாய்ந்ததாகும். இவ் வகைப் பருத்திச் செடி மிகச் சிறியதாக இருக்கும்

பொழுதே காய்த்து விடுகிறது. மிக விரைவில் பலன் அளிக்கிறது. 125 நாட்களுக்கு மேற்படாத கால அளவுக்குள் பலன் கிட்டி விடுகிறது. இந்த வகைப் பருத்தி இழைகளின் குறைந்த அளவு 0.97 அங்குல மாகும். அதன் விதை நீக்கச் சதவிகிதம் 36 ஆகும்.

மேற்படி ரகத்தைச் சேர்ந்த பருத்தி மிக விரைவில் பலன் தருவதால் அதை நெல் விளைந்த தரிசுநிலங்களி லும் சாகுபடி செய்வதன் மூலம் உற்பத்தியை மேலும் பெருக்க முடியும். விசேஷமாக நெல் அறுவடைக்குப் பிறகு அவ்வயல்களில் பருத்தியை உற்பத்தி செய் வதன் மூலம் அதன் உற்பத்தி அதிகரிக்கிறது.

## கரும்பு உற்பத்தி

இரண்டாவது திட்ட முடிவில் 6.75—லட்சம் மெட் ரிக் டன் கரும்பு வெல்லம்—உற்பத்திசெய்யப்பட்டது. 1963—64-ல் 7.28 லட்சம் மெட்ரிக் டன்னும், 1964—65ல் 7.58 லட்சம் மெட்ரிக் டன்னும் உற்பத்தி செய்யப் பட்டது.

கரும்பை நிலத்தில் இருந்து தொழிற்சாலைக்கு எளிதாகவும், விரைவாகவும் கொண்டு செல்ல வசதியா யிருக்கும் பொருட்டு, புதிய சாலைகளை அமைக்கும் வேலையும், தற்போதுள்ள மண்சாலைகளை செப்பனிடும் வேலையும்,மேற்கொள்ளப்பட்டன. 1961—62-ல் 8½மைல் நீளத்திற்கும், 1963—64-ல் 4 மைல் நீளத்திற்கும் சாலை கள் போடப்பட்டன. 1961—62-ல் 11 சிறு பாலங்களும் 1963—64-ல் ஒரு சிறு பாலமும் கட்டப்பட்டன.

எண்ணெய் வித்துக்களான நிலக்கடலை, எள் ஆமணக்கு ஆகிய மூன்றின் வளர்ச்சியிலும் சிறப்பாக

கவனம் செலுத்தப்படுகிறது. தீவிரச் சாகுபடி மூலமா கவும் சாகுபடி விஸ்தரிப்பு வேலைகள் மூலமாகவும் உற்பத்தி அளவு அதிகமாகும். தரமான விதைகளை வழங்குவது மூலமாகவும்,உரங்களையும்—உரக்கலவை களையும் வழங்குவது மூலமாகவும், செடிப் பாதுகாப்பு நடவடிக்கைகளை மேற்கொள்ளுவதன் மூலமாகவும் வேலை நடந்து வருகிறது.

## முந்திரித் தோட்டம்

முந்திரித் தோட்டங்களை நிறுவுவதற்குப் பய னுள்ள நடவடிக்கைகள் மேற்கொள்ளப் படுகின்றன. ஒவ்வோர் ஆண்டும் 2.000 ஏக்கராவாக 10,000 ஏக்கரில் முந்திரி சாகுபடி செய்வதாக முதலில் திட்டமிடப் பட்டது பின்னர் 1963—64-ல் இராமநாதபுரம் கரை யோரப் பகுதிகளில் மற்றும் 10,000 ஏக்கரில் முந்திரி சாகுபடி செய்து முந்திரித் தோட்டங்ளை அதிகப் படுத்தத் தனித்திட்டம் ஒன்று வகுக்கப்பட்டது.

தென்னம்பிள்ளைகளின் தேவை அதிகரித்துக் கொண்டே வருகிறது. இதற்காக தென்னை வளர்ப்புப் பண்ணைகளின் எண்ணிக்கை 13-ல் இருந்து 15-ஆக உயர்த்தப் பட்டுள்ளது. தென்னம் பிள்ளைகளின் ஆண்டு உற்பத்தி 3.23 லட்சத்தில் இருந்து 4 லட்ச மாக உயர்த்தப்பட்டுள்ளது.

பாக்கு உற்பத்தியை அதிகரிப்பதிலும் தக்க நட வடிக்கை எடுக்கப்படுகிறது. தரமுள்ள நாற்றுக்களை வினியோகிப்பதும், தெளிப்பான்கள் உபயோகிப்பது உட்பட காப்பு நடவடிக்கைகளும் இந்த வகையில் முக்கியமானவையாகும். நீலகிரியில் கல்லார், கடலூர் ஆகிய இடங்களிலும், திருநெல்வேலி மாவட்டத்தில் குற்றாலத்திலும்,கன்னியாகுமரி மாவட்டத்தில் கோடிக்

கரையிலும், மதுரைமாவட்டத்தில் பெரியகுளத்திலும் பாக்கு நாற்றுப் பண்ணைகள் செயல் பட்டு வருகின்றன.

## பழத் தோட்டங்கள்

நமது மாநிலத்தில் புதிய பழத்தோட்டங்கள் அமைப்பதில் தனிக் கவனம் செலுத்தப்படுகிறது. மூன்ருவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் புதிய பழத் தோட்டங்களுக்காக ஒதுக்கப்பட்ட 5,000 ஏக்கரில் 1961—62-ல் 829 ஏக்கரிலும், 1962—63-ல் 1,010 ஏக்க ரிலும்,1963—64-ல் 1,195 ஏக்கரிலும் பழத்தோட்டங் கள் அமைக்கப்பட்டன.

இப்போதுள்ள பழத்தோட்டங்கள் சிறிய அளவில் சீரமைத்துப் புதுப்பிக்கப்படுகின்றன. மாதிரிப் பழத் தோட்டங்களை நிறுவி விதைகளை விநியோகிப்பதிலும் விசேஷ கவனம் செலுத்தப் பட்டு வருகிறது.

1964—65-ல் வட ஆற்காடு மாவட்டத்தில் வாழை வளர்ப்பிற்காக அதிதீவிர திட்டம் ஒன்று புதிதாகப் புகுத்தப்பட்டது.

முக்கிய நகரங்களிலும், அவைகளைச் சுற்றிலும், காய்கறி பெருக்குவது பற்றித் தொடர்ந்து தனிக் கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. வர்த்தக விளை பொருள் சந்தைக் கூட்டத்தைச் சென்னைமாநகரில் மட்டுமின்றி வேலூர், சேலம், ஈரோடு, தஞ்சாவூர் ஆகிய நகரங்களிலும் செயல் படுத்துவதுடன், சென்னை மாநகரில் பணி அறைச்சாதனம் ஏற்படுத்து வதும் மேற்படித் திட்டத்தின் சிறப்பு அம்சங்க ளாகும்.

## விவசாய ஆராய்ச்சி

கோவையில் உள்ள விவசாயக் கல்லூரி ஆராய்ச்சி நிறுவனத்தில் விவசாய ஆராய்ச்சிப் பணி நடைபெறுகிறது. விவசாய அறிவியலில் பல்வேறு துறைகளின் கீழ் அடிப்படை ஆராய்ச்சி- செய்முறை ஆராய்ச்சிப் பணிகளை மேற்கொள்ள மொத்தம் 16 ஆராய்ச்சிப் பிரிவுகள் உள்ளன. இத்துடன் ஆடுதுறை, திண்டிவனம், கோயில்பட்டி ஆகிய இடங்களிலுள்ள வட்டார ஆராய்ச்சி நிலையங்களில் தீவிர ஆராய்ச்சிப் பணி நடைபெறுகிறது.

கடலூரில் உள்ள மத்திய கரும்பு ஆராய்ச்சி நிலையத்தில் கரும்பு பற்றிய ஆராய்ச்சி வேலையும் நடைபெற்று வருகிறது. பெரியகுளம் பழ ஆராய்ச்சி நிலயத்தில் பழங்களைச் சிறந்த முறையில் உற்பத்தி செய்வது பற்றிய ஆராய்ச்சி வேலை நடைபெற்று வருகிறது. இவற்றுடன் இந்திய விவசாயக் குழு, பயிர்ப் பொருட்கள் குழு ஆகியவற்றின் நிதி உதவியோடு 66 திட்டங்கள் தயாரிக்கப்பட்டுள்ளன.

விதைப் பெருக்கத்தின் பல்வேறு நிலைகளில் விதைகளின் சுத்தம், எவ்வளவு நாள் கெட்டுப்போகாமல் விதைகள் பாதுகாக்கப்படலாம் என்பதைச் சோதனை கூடத்தில் விதைகளைப் பரிசோதித்துக் குடியானவர்களுக்குத் தரமான விதைகள் வழங்கப்படும். மண் வளப் பரிசோதனை ஆய்வுக்கூடங்களும், பயிர்ப் பூச்சி மருந்து பரிசோதனைக் கூடங்களும் இப்பணிகளைச் செவ்வனே நிறைவேற்றி வருகின்றன.

உருளைக்கிழங்கு கருகல் நோய் "லேட் பிளைட்", "கோல்டன் நெமடோட்" போன்ற நோய்கள் உருளைக் கிழங்குப் பயிரை பீடித்திருப்பதால் உருளைக்கிழங்கு

வியாபாரத்தில் பல இன்னல்களைத் தீர்க்கவேண்டி யிருக்கிறது. 'நெமடோ' பூச்சியை ஒழிக்க உதகமண் டலத்தில் ஆராய்ச்சி செய்யப்படுகிறது. நோய் நீங்கிய உருளைக்கிழங்கு உற்பத்தி ஆராய்ச்சி நிலையம் உதகமண்டலத்தில் ஏற்படுத்தப்பட்டுள்ளது.

## வர்த்தகக் குழுக்கள்

தமிழ்நாட்டில் இப்போது முறைப்படுத்தப்பட்ட 75 வர்த்தகக் குழுக்கள் உள்ளன. 1965-ம் ஆண்டுத் தொடக்கத்தில் 66 வர்த்தக் குழுக்கள் இருந்தன. தற்போது மேலும் 9 குழுக்கள் ஆரம்பிக்கப்பட்டன.

"அக்மார்க்" சின்னத்தின்கீழ் பொருள்கள் தரப் படுத்தப்படுவதன்மூலம், பொருள்கள் சுத்தமாகவும், தரமானதாகவும் கிடைக்கின்றன. 'அக்மார்க்' முத் திரை யிடுவதனுல் விற்பவர்க்கும் வாங்குபவருக்கும் சரக்கு உத்திரவாதம் கிடைக்கிறது.

நம் மாநிலத்தில் நெய், எண்ணெய் ஆகியவை களைத் தரப்படுத்துவதற்கு ஆறு ஆய்வுக்கூடங்கள் உள்ளன. இவை முறையே ஈரோடு, கோவை, கரூர் சென்னை, மதுரை, விருதுநகர் ஆகிய இடங்களில் உள்ளன. நெல், நிலக்கடலை, வெல்லம், உருளைக் கிழங்கு, சாத்துக்குடி, ஆரஞ்சு, மாம்பழம் ஆகியவை வர்த்தக ரீதியில் தரப்படுத்துவதன் நன்மை உற்பத்தி யாளருக்குக் கிடைக்கிறது.

# நமது கால்நடைச் செல்வம்

நமது நாட்டின் பொருளாதாரத்தில் விவசாயம் மிக முக்கியமான அங்கம் வகிக்கிறது. உற்பத்தியைப் பெருக்குவதிலும், உழவு வேலைகளுக்கு இன்றியமையாததாகவுமுள்ள மாட்டுச் செல்வத்தை வளர்த்துப் பேணுவதிலும் நாம் தனிக்கவனம் செலுத்தி வருகிறோம். நமது மாநிலத்திற்கு வேண்டிய ஊட்டச் சத்து நிறைந்த உணவுப் பொருள்களைக் கிடைக்கச் செய்வதிலும், தரமான பால், முட்டை, இறைச்சி இவை கிடைக்கச் செய்வது, உயர்ந்த ஜாதி எருதுகள் கிடைக்கச் செய்வது, கம்பளி, ஆட்டுத் தோல் போன்ற பொருள்களை உறபத்தி செய்வது ஆகிய வேலைகளிலும் தீவிர கவனம் செலுத்தி வருகிறோம்.

## நோய்க் கட்டுப்பாடு

மாவட்டங்களில் அமைந்துள்ள கால்நடை மருத்துவ நிலையங்கள், கால்நடைச் சுகாதாரம் பேணும் வேலைகளையும் நோய்க் கட்டுப்பாடு வேலைகளையும் மேற்கொள்கின்றன. அரசாங்கக் கால்நடைப் பண்ணை

களிலும், கிராம மையத்திட்டத்தின் மூலமாகவும் உயர்தரக் கால்நடைகள் மூலம், உள்ளூர் இன வகை களில் தரத்தையும் உயர்த்த வழி செய்யப்படுகிறது.

சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரி நமது நாட்டின் தலைசிறந்த கல்லூரிகளில் ஒன்றாகும். கால்நடை வளர்ப்பைச் சேர்ந்த பல திட்டங்களை நிறைவேற்றுவதற்குத் தேவையான கால்நடை மருத்துவர்களுக்கு இக்கல்லூரி பயிற்சி அளிக்கிறது. கால்நடைகளுககு அந்தந்தப் பருவ காலங்களில் ஏற்படும் தொத்து நோய்களைத் தடுப்பதற்கு வேண் டிய தடுப்பு மருந்துகளும், அம்மைப்பால்களும், இராணிப்பேட்டையில் உள்ள கால்நடை நோய்த் தடுப்பு நிலையத்தில் தயாரிக்கப்படுகின்றன.

## மையக் கிராமத் திட்டம்

நமது மாநிலத்தில் 'மையக் கிராமத் திட்டம்' அமுல் நடத்தப்பட்டு வருகிறது. குறிப்பிட்ட சில பகுதிகளில், கால்நடை உணவு, இனப் பெருக்கம், நிர்வாகம், நோய்த்தடுப்பு ஆகிய நடவடிக்கைகள் மூலம், விஞ்ஞான முறையில் கால்நடைப் பேணுதலில் ஏற்றம் காணும் நோக்கம் கொண்டது மையக் கிராமத் திட்டம். இத்திட்டத்தின் கீழ் 1963-64-ல் 57மையக் கிராமச்செயற்கை முறைக் கருத்தரிப்பு நிலையங்களும், 454மையக் கிராமங்களும் நிறுவப்பட்டன. 1964-65-ல் அப்போது செயல்பட்டு வந்த செயற்கை முறைக் கருத்தரிப்பு நிலையங்கள் மையக்கிராம வட்டாரங் களாக மாற்றப்பட்டன.

மையக்கிராம நிலையங்களைத்தவிர, நகர்ப்புற, கிராமப் பகுதிகளில் கறவை மாடுகளின் வளர்ச்சிக்

காக 29 செயற்கை முறைக் கருத்தரிப்பு நிலையங்களும் செயல்பட்டு வருகின்றன.

எழுபத்தி மூன்று மையக்கிராம விஸ்தரிப்பு நிலையங்கள் இப்போது செயல்பட்டு வருகின்றன. ஒவ்வொரு நிலையத்திலும் 50 நல்ல இன எருதுகளும் "முர்ரா" வகையைச் சேர்ந்த எருமைகளும் உள்ளன. இவை மையக் கிராமப் பகுதிகளிலிருந்து இனப் பெருக்கம் செய்யப் பட்டவை ஆகும். மையக் கிராமப் பகுதிகளில் கன்று வளர்ப்பு உதவித்திட்டம் தொடர்ந்து செயல்பட்டு வருகின்றது. 1964-65-ல் 2,000 கன்றுகள் இத்திட்டத்தின் கீழ்ச் சேர்க்கப் பட்டுள்ளன.

## கால் நடைத் தீவனம்

கால் நடைத் தீவன-தழைஉர அதிகரிப்புத் திட்டம், மையக் கிராம வட்டாரங்களில் நிறை வேற்றப் படுகிறது. இத்திட்டத்தின் கீழ், அபிவிருத்தி செய்யப்பட்ட மேய்ச்சல் நிலங்கள் பண்படுத்தப் படு கின்றன. தீவனப் பயிர்களின் விதைகள், புல் இவை குடியானவர்களுக்குப் பாதி விலையில் வழங்கப்படு கின்றன. உமிநீக்கும் சாதனங்கள் சகாய விலையில் வழங்கப் படுகின்றன. தீவனக் குழிகள் அமைக்கவும், குறுகியகால தீவனப் பயிர்வளர்க்கவும், எப்பொழுதும் கிடைக்கும் தீவனச் செடிகளை வளர்க்கவும் உதவித் தொகை வழங்கப்படுகின்றன.

ஓசூர், புதுக்கோட்டை ஒரத்தநாடு, செட்டிநாடு, உதகை ஆகிய இடங்களில் பல கால்நடைப் பண்ணைகள் நடத்தப்பட்டு வருகிறன. 1963-64 பிற் பகுதியில் திருநெல்வேலி மாவட்டம், அபிஷேகப்

பட்டியில் கால்நடைப் பண்ணை ஒன்று நிறுவப் பட்டது. இப்பண்ணை 2,080 ஏக்கர் நிலத்தில் அமைக் கப்பட்டுள்ளது. இங்கு தார்பார்கர், சிந்தி, முர்ரா வகை மாடுகள் வளர்க்கப் படுகின்றன.

இராமநாதபுரம் மாவட்ட கால்நடைப்பண்ணை யில், நிறுவப் பட்டுள்ள மாநிலக் கால்நடை ஆய்வு நிலையத்தில் கால்நடை ஊட்டச்சத்து பிரிவு செயல் பட்டு வருகிறது.

ஓசூர் கால்நடை ஆராய்ச்சி நிலையத்திலும், செங்கற்பட்டு செம்மறியாட்டுப் பண்ணையிலும், புதுக் கோட்டையில் உள்ள மாவட்ட கால்நடைப் பண்ணை யிலும் நிறுவப்பட்டுள்ள பன்றி வளர்ப்புப் பிரிவுகள் தொடர்ந்து செயல்பட்டு வருகின்றன. 1964-65-ல் மேலும் இரண்டு பன்றி வளர்ப்பு வட்டாரங்கள் செயல்பட்டு வருகின்றன.

நமது நாட்டில் உள்ள குன்றுப் பகுதிகளிலும் பீடபூமிப் பகுதிகளிலும் உள்ள நாட்டு மாடுகளுடன் 'ஜெர்சி' மாடுகளைக் கொண்டு இனக்கலப்புச் செய்ய பல நிலையங்கள் பணியாற்றுகின்றன. இதன் தலைமை அலுவலகம் உதகமண்டலத்தில் உள்ளது.

**உயர்ந்த ரகக் கன்றுகள்**

குன்றுப் பகுதிகளிலும் பீடபூமிப் பகுதிகளிலும் உள்ள மாடுகளைக் கலக்கச் செய்து உயர்ந்த ரகக் கன்றுகளை அடையும் நோக்கத்துடன் ஜெர்ஸி முறைக் கருத்தரிப்புத் திட்டம் தொடங்கப் பட்டது. மலைஜாதி மாடுகளை அபிவிருத்தி செய்வதே இத்திட்டத்தின் நோக்கமாகும். இதன் தலைமை அலுவலகம்

கோடைக்கானலில் உள்ளது. இதனுடன் 5 துணை நிலையங்களும், 8 கீழ் நிலையங்களும் இணைக்கப்பட்டுள்ளன. செயற்கை முறைக் கருத்தரிப்பு மூலம் உள்ளூர் மாடுகளை ஜெர்ஸி காளைகளுடன் கலக்கச் செய்து இனப்பெருக்கம் செய்வதும் பால் உற்பத்தியை அதிகரிப்பதும் இத்திட்டத்தின் நோக்கங்களாகும்.

செங்கற்பட்டு மாவட்டத்தில் உள்ள அலமாதியில் பால் வற்றிய மாடுகளுக்கான காப்புப் பண்ணையும், அதனைச் சார்ந்து மாதவரம் பால் பண்ணையில் தொழிற்படும் பண்ணையும் தொடர்ந்து செயலாற்றி வருகின்றன. சென்னை நகரிலும், மாதவரம் பால் பண்ணையிலும் உள்ள கறவைமாடுகள் பால்வற்றும் காலத்தில் அவற்றிற்கு இடம் அளித்து அவற்றைச் சொந்தக்காரரிடம் ஒப்படைப்பதே இப்பண்ணையின் நோக்கமாகும்.

உதகமண்டலம் செம்மறியாடு வளர்ப்பு ஆராய்ச்சி நிலையத்தில் சிறந்த கம்பளி தயாரிப்பு, இறைச்சி இவற்றுக்கான வேலை திட்டம் எடுத்துக் கொள்ளப் பட்டிருக்கிறது. இதுவரை செம்மறியாடு, கம்பளி விரிவுநிலையங்கள் 28 ஏற்படுத்தப்பட்டுள்ளன. இதில் 7 செம்மறியாடு வளர்ச்சிப் பண்ணைகளாகும். இந்த நிலையங்களிலும், பண்ணைகளிலும், செம்மறியாடு, வெள்ளாடுகளில் புழு உண்ணி இவை பீடிப்பதைத் தடுப்பது எவ்வாறு என்பதைச் செய்முறையாக விளக்கிக் காட்டுவதன் பலனாய் இப்பகுதிகளில் வளர்க்கப்படும் செம்மறியாடுகளின் தரம் கணிசமாக முன்னேறியுள்ளது.

## கோழிப் பண்ணைகள்

கோழிப்பண்ணைகள் வைப்பது மக்களிடையே வெகுவாகப் பரவி வருகிறது. தனி நபர்கள் பெருவாரி

யாக உற்சாகத்துடன் கோழிப்பண்ணை ஆரம்பித்து வருகிறார்கள். இரண்டாவது திட்ட காலத்தில் ஏற்படுத்தப்பட்ட 28 நிலையங்களுடன் மொத்தம் 55 கோழிப்பண்ணைகள் தொடர்ந்து செயல்பட்டு வருகின்றன. கோழிப்பண்ணை விரிவு நிலைய வளர்ச்சித் திட்டத்தின் கீழ் இதுவரை 100 முட்டைகளிடும் 4 கோழிப்பண்ணை விரிவு நிலையங்கள் 500 முட்டைகளிடும் விரிவு நிலையங்களாக மேம்படுத்தப் பட்டுள்ளன.

காட்டுப்பாக்கத்தில் உள்ள செம்மறியாட்டுப் பண்ணையில் கோழிக் குஞ்சுகளை வளர்க்கும் திட்டம் செயல்படுகிறது. கோழி இவை வளர்ச்சிக் காரியங்களுக்காக இதுவரை 11,128 கோழிக் குஞ்சுகள் வழங்கப்பட்டன.

கிராமக் கோழிப்பண்ணை வளர்ச்சித் திட்டத்தின் கீழ் தேர்ந்தெடுக்கப்பட்ட வளர்ச்சி வட்டாரங்கள் ஒவ்வொன்றுக்கும் சிறந்த சீமைச் சாதியைச் சேர்ந்த குஞ்சுகள் விநியோகிக்கப்பட்டன. இத்திட்டத்தின் கீழ் 1964—65ல், 45 வளர்ச்சி வட்டாரங்கள் தேர்ந்தெடுக்கப்பட்டன. மொத்தம் 9,000 சேவற் குஞ்சுகள் விநியோகம் செய்யப்பட வேண்டும் என்று திட்ட இலக்கு இருக்க, ஒவ்வொரு வட்டாரத்திற்கும் 200 கோழிக்குஞ்சுகள் என்ற விகிதத்தில் 6,500 குஞ்சுகள் இதுவரை வழங்கப் பட்டுள்ளன.

### நவீன முறை

கோழிப் பண்ணை வளர்க்கும் குடியானவர்களுக்கு நவீன முறைகளில் கோழிப் பண்ணை வளர்ப்பது எவ்வாறு என்பது குறித்து பயிற்சி கொடுக்கப் படுகிறது. தேனாம்பேட்டையில் உள்ள கோழிப்

பண்ணை ஆராய்ச்சி நிலையத்திலும், செட்டி நாட்டில் உள்ள இராமநாதபுரம் மாவட்ட கால் நடைப் பண்ணை யிலும், ஓசூரில் உள்ள கால் நடைப் பண்ணையிலும் இப்பயிற்சி கொடுக்கப்படுகிறது. 1964—65-ல் 184 குடியானவர்களுக்கு பயிற்சி கொடுக்கப்பட்டிருக் கிறது.

கோழிக்குஞ்சு வளர்ப்பவர்களுக்கு ஒரு நாள் வயதுள்ள கோழிக்குஞ்சுகள் விநியோகிக்கப் படுகின் றன. ஒவ்வொரு கோழிக்குஞ்சுக்கும் 50 காசு வீதம் கோழி வளர்ப்பவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது. 1964-65ல் 14,000, கோழிக்குஞ்கள் வழங்கப்பட்டுள்ளன. இன்னும் 20,000 கோழிக்குஞ்சுகள் வழங்கப்படும்.

கோழி வளர்ப்புப் பெட்டிகளை அமைத்துக் கொள் வதற்காக கோழி வளர்ப்புப் பண்ணை வைத்திருக்கும் குடியானவர்களுக்கு உதவி அளிக்கப்படுகிறது. 1964—65-ல், 353 கோழிவளர்ப்புப் பெட்டிகள் அமைப் பதற்கு உதவி அளிக்கப்பட்டது. இத்திட்டம் தொடர்ந்து நிறைவேற்றப்படும். அடைகாக்கும் கருவி களை மலிவான விலைகளில் வழங்குவதற்காக கோழி வளர்ப்பவர்கள் ஒவ்வொருவருக்கும் அதிக அளவு ரூ. 2·50-க்கு மேற்படாமல் பாதி விலையில் அடை காக்கும் கருவிகள் வழங்கப்படுகிறது.

நமது மாநிலத்தில் சத்துணவுத் திட்டம் யூனிசெஃப் (Unicef) நிறுவனத்தாரின் உதவியுடன் செயல் பட்டு வருகிறது. இத்திட்டத்தின் கீழ் கர்ப்பிணிகளுக்கும், சிசுக்களுக்கும், தாய்மார்களுக்கும், சிறுபாலர்களுக்கும் முட்டை விநியோகம் செய்யப்படு கிறது. இத்திட்டத்தின் கீழ் கிராம விஸ்தரிப்புப் பணி நிலையங்களில் உள்ள 7 தலைமையிடங்களில் கோழிப்

பண்ணை விரிவு நிலையங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. இந்த 7 நிலையங்களிலும் பெரிய அளவில் அடை காக்கும் கருவிகள் ஏற்படுத்தப்பட்டுள்ளன. தீவன அரைப்புக் கருவிகளும், தீவனக் கலப்புக் கருவிகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆரம்பிக்க உத்தேசித்துள்ள 290 கிராம கோழிப்பண்ணைப் பிரிவுகளில் இது வரை 229 பிரிவுகள் நிறுவப்பட்டு விட்டன. கிராமக் கோழிப் பண்ணைகளில் இருந்து இதுவரை 3, 83, 361 கோழி முட்டைகள் வழங்கப்பட்டன.

## கால் நடை மருத்துவக் கல்லூரி

சென்னை கால்நடை மருத்துவக் கல்லூரி, இந்தியாவிலேயே முதன்மையான, தலைசிறந்த கல்லூரியாகும். இந்தக் கல்லூரியில் பிற மாநிலங்களில் இருந்து வந்த மாணவர்களும் பயில்கிறார்கள். இங்கு கால் நடை வளர்ப்புத் துறையின் பல்வேறு பிரிவுகளுக்கு தேவைப்படும் பணியாளர்களுக்குப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இந்தக் கல்லூரியில் கால் நடை மருத்துவக்கல்வி, மருத்துவ ஆராய்ச்சி சென்னை பல்கலைக்கழக பி. வி. எஸ் ஸி. பட்ட படிப்பில் மருத்துவப்பாட முறைப் பயிற்சி ஆகியவற்றிற்கு வசதிகள் அளிக்கப்படுகின்றன. நவீனமுறைகளில் தோலுரிப்பு பாடப் பயிற்சியும் இக்கல்லூரியில் அளிக்கப்படுகிறது. பி. வி. எஸ் ஸி. பட்டப் படிப்புக்கான இடங்களின் எண்ணிக்கை 1964—65-ம் ஆண்டு முதல் 120-லிருந்து 136 ஆக உயர்த்தப்பட்டது.

இந்தக் கால் நடை மருத்துக் கல்லூரியில் கால் நடைப்பணியாளர்களுக்கு 11-மாதப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இவர்கள் கால நடை உதவி மருத்துவர்களுக்குத் துணையாக இருப்பார்கள். நமது மாநிலத்தில்

ஒசூர், ஒரத்தநாடு, செட்டி நாடு, புதுக்கோட்டை ஆகிய இடங்களிலுள்ள கால் நடைப் பண்ணைகளில் இந்தப் பயிற்சி முறை ஒரே சமயத்தில் நடத்தப் படுகின்றன. இந்த நிலையங்களில் ஆண்டு தோறும் 250 பேர் பயிற்சி பெறுகின்றனர்.

சென்னையிலும், பிற மாவட்டங்களிலும், கால் நடைத் தோலுரிப்புத் தொழிலில் ஈடுபட்டவர்களுக்கு 3 மாதப் பயிற்சி அளிக்கப்படுகிறது. சென்னை கால் நடை மருத்துவக் கல்லூரியில் மேற்சொன்ன வகுப்புகளை நடத்துவதோடு கூட எம். எஸ்ஸி., பி. எச். டி, பட்டம் பெறுவதற்காகவும் இக்கல்லூரியின் பல் வேறு துறைகளில் பட்ட மேற்படிப்பு வசதிகளும் செய்து கொடுக்கப்பட்டு வருகின்றன. இப்போது இக் கல்லூரியில் 624 மாணவர்கள் பயிற்சி பெற்று வரு கிறார்கள்.

## கால் நடை நோய்கள்

கால்நடைகளுக்கு ஏற்படும் கோமாரி, பிளாக் குவார்ட்டர் (Black Quarter), ஹெமொரோஜிக் செப்டிக் கேமியா (Haemorrhagic Septicamia), அடைப்பான் முதலிய நோய்களுக்கும், கோழிகளுக்கு ஏற்படும் ராணிகட், கோழி அம்மை முதலிய நோய்களுக்கும், ஆடுகளுக்கு வரும் அம்மை நோய்களுக்கும், தேவை யான மருந்துகள் இராணிப்பேட்டையில் உள்ள கால் நடை நோய் தடுப்பு மருந்து நிலையத்தில் உற்பத்தி செய்யப்படுகின்றன.

நவீன முறையில் அம்மைப்பால் தயாரிக்கும் பொருட்டு உறைந்து உலர்த்தும் இயந்திரம் ஒன்றும் இந்த நிலையத்தில் அமைக்கப்பட்டுள்ளது. எல்லா

வகை அம்மைப்பாலும் இந்த நிலையத்தில் தயாரிக்கப் பட்டு உறைந்தும் உலத்தப்பட்ட வடிவில் அளிக்கப் படுகிறது. இந்த நிலையம் மற்ற மாநிலங்களுக்கும் நோய்த்தடுப்பு மருந்துகளை வழங்குகிறது. இங்கு அம்மைப் பாலின் தரத்தை உயர்த்துவது குறித்து ஆராய்ச்சி நடத்தப்படுவதுடன் நோய் விலக்கும் தன்மை பற்றியும் சீர்தூக்கிப் பார்த்து ஆராய்ச்சிகள் நடத்தப்படுகின்றன. இத்துடன் ஆடு, மாடுகள், கோழிகள் முதலியவற்றிற்கான தனி நோய் ஆராய்ச்சி யூனிட்டுகள், மாநிலம் முழுவதும் பரிசோதனைகள் நடத்தி அவற்றை ஆய்வுகூடப் பரிசோதனையுடன் இணைத்து முடிவு காணச் செயல் படுகின்றன.

நமது மாநிலத்தில் 36 கால்நடை மருத்துவ மனைகளும், 198 கால்நடை மருந்தகங்களும், 73 சிறு மருந்தகங்களும், !9 இயங்கும் மருத்துவவண்டிகளும், 90 முதலுதவி நிலையங்களும் ஆக மொத்தம் 416 கால் நடை மருத்துவ நிலையங்கள் உள்ளன. இந்த நிலையங் களில் நோயுற்ற கால்நடைகளுக்கு சிகிச்சை அளிக்கப் படுவதுடன் கால்நடை வளர்ச்சிப் பணிகளும் மேற் கொள்ளப்படுகின்றன. இயங்கும் கால்நடை மருத்துவ வண்டிகள் மூலம் அந்தந்த இடங்களில் மாடுகளுக்கு ஏற்படும் தொத்து நோய்களைத் தவிர்க்க முடிகிறது.

## தொத்து நோய் சிகிச்சை

சிறு மருந்தகங்களின் பொறுப்பு வகிக்கும் கால் நடை மருத்துவர், தொத்து நோய் பற்றி அறிக்கை வந்தவுடன் அவற்றைக் கவனித்து ஆவன செய்ய வேண்டும். கொள்ளை நோய் பகுதிகளில் பாதுகாப்பு முறையாக மாடுகளுக்குத் தடுப்பு ஊசி போட வேண்டும். தொத்து நோய்களை உடனடியாக கட்டுப்

படுத்தும் பொருட்டு 20 கால்நடை வளர்ப்பு மாவட்டங்கள், ஒவ்வொன்றிலும் ஒன்றுக 20 இயங்கும் கால்நடை மருத்துவ யூனிட்டுகள் பணியாற்றுகின்றன. இவைகள் தொத்துநோய்களை உடனடியாகத் தடுப்பதில் பெரும் பங்கு வகிக்கின்றன.

நமது மாநிலத்தில் மாடுகள் வளர்ச்சியைப் பெருக்க மூன்ருவது திட்டத்தின்கீழ் அனுமதிக்கப்பட்ட சாதாரணத் திட்டங்களுடன், விரைவுத் திட்டம் எனப்படும் 'சிறப்பு வளர்ச்சித் திட்டம்' ஒன்று எடுத்துக் கொள்ளப்பட்டது. இத் திட்டத்தின் மூலம் முட்டைகள், இறைச்சி முதலிய துணை உணவு வகைகள் உற்பத்தியைப் பெருக்கி ஊன் உணவுப் பண்டங்கள் நியாய விலைக்கு அதிக அளவில் கிடைக்கச் செய்வதன்மூலம் உணவு தானியத் தேவைகளைக் குறைப்பதும் இதன் நோக்கமாகும்.

### கடனுதவி

வளர்ச்சிப் பகுதிகளில் முட்டை, கோழி இறைச்சி இவற்றின் உற்பத்தியைப் பெருக்கும் மேற்படி ஆறு திட்டங்கள் கோழிப்பண்ணை அபிவிருத்தியை நோக்கமாகக் கொண்டுள்ளன. கோழிப் பண்ணை வைத்திருக்கும் குடியானவர்களுக்குக் கருவிகள், கோழிக்குஞ்சுகள் இவற்றைவாங்கிக்கொள்வதற்குக் கடனுதவி—மானிய உதவி வழங்குதல், கூட்டுறவுச் சங்கங்களை அமைத்தல், முட்டைகள், கோழிகள் இவற்றைச் சேகரித்து உணவு முதலியவற்றிற்காக விற்பனை செய்தல் ஆகியவை இத்திட்டங்களின் குறிப்பிடத்தக்க அம்சங்களாகும். நல்ல இறைச்சியும், தரமான உரமும் கிடைப்பதற்கு வசதியாக உள்நாட்டு திட்டங்கள் உள்ளன.

சென்னை, மதுரை, கோயம்புத்தூர் ஆகிய பால் பண்ணைப் பகுதிகளில் செயல்படுத்தப்படும் அதிதீவிர திட்டத்தைப் போன்று கால்நடை வளர்ச்சி வட்டாரங் களிலும், தீவிரத் திட்டம் ஒன்று மேற்கொள்ளப்பட் டிருக்கிறது. பால் பண்ணைப் பகுதிகளில் கால்நடைப் பராமரிப்பு, தீவனப்பயிர் சாகுபடி, பால் சேகரித்தல், விற்பனை செய்தல், இவற்றை எளிதாக்குதல் ஆகிய வையே இத்திட்டத்தின் நோக்கங்களாகும்.

## காவலர் கடமை

போலீசாரின் முக்கிய கடமை பொது மக்களை சமூக விரோதிகளிடமிருந்தும், குற்றமிழைப்போரிட மிருந்தும் பாதுகாப்பதாகும். ஆங்கிலேயர்கள் நமது நாட்டை ஆண்டபோது போலீசார் ஒரு தனி வர்க்க மாகக் கருதப்பட்டார்கள். அவர்களைப் பயத்தின் சின்னமாகவும் பொது மக்கள் கருதினார்கள். நாடு 1947ம் ஆண்டு சுதந்திரம் அடைந்தது. போலீசாரின் அடிப்படை நோக்கம், கடமை, செயல் ஆகியவற்றில் பெருத்த மாறுதல்கள் செய்யப்பட்டன. சமூகம் போலீசாரால் தான் காப்பாற்றப்படுகிறது என்ற நிலை மாறி நாட்டின் நலத்தில் போலீசாருக்கும் சிறப்பான பங்கு உண்டு என்ற எண்ணம் அனைவருக்கும் ஏற்பட்டது.

நேர்மை, திறமை, தீவிர உழைப்பு ஆகியவற்றில் நல்ல பெயரெடுத்துள்ள நமது மாநிலப் போலீசார், சுதந்திர நாட்டின் புதிய அமைப்பிற்குத் தகுந்தபடி மக்களுக்குச் சேவை செய்வதில் நல்ல பெயர் எடுத்து பொது மக்களுக்குச் சேவைசெய்து வருகிறார்கள்.

## புதிய பிரச்னைகள்

நாடு தொழில் மயமாகிக் கொண்டு வருகிறது. புதிய நகரங்கள் உண்டாகின்றன. இந்த நிலையில் போலீஸ் வேலை என்பது ஒரே இடத்தில் நிலைத்து இருப்பதல்ல. நாட்டில் ஏராளமான பிரச்னைகள் தோன்றுகின்றன. அவற்றின் அளவும், சிக்கலும் அதிகமாகின்றன. இந்த நிலையில் போலீசாரின் பொறுப்பு அதிகம் ஆகின்றது. நவீன நாகரீக வளர்ச்சி, விஞ்ஞானத்தில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் ஆகியவைகளுக்குத் தகுந்தபடி போலீசார் கடமை ஆற்ற வேண்டியிருக்கிறது.

1957 முதல் 1962ம் ஆண்டு வரை குற்றங்களின் எண்ணிக்கையும், புலன் விசாரணை செய்யப்பட்டு கண்டு பிடிக்கப்பட்டவைகளின் சதவிகிதமும் குற்றங்கள் கட்டுப் பாட்டுக்குள் கொண்டு வரப் பட்டன என்பதை உறுதிப்படுத்துகின்றன. எல்லா வகைகளிலும், குற்றங்கள் கண்டு பிடிப்பது உறுதி யான முறையில் அதிகமாகி வருகிறது என்பதும் இங்கு குறிப்பிடத் தக்கதாகும்.

## நாகரீகக் குற்றங்கள்

உலகயுத்தம் முடிவடைந்த பிறகு குற்றங்கள் பல்வேறு வகைகளில் அதிகம் ஆயின. 'நாகரீக'க் குற்றங்கள் பெருத்த அளவில் அதிகரித்தன. இதை அடக்க போலீசார் தங்கள் திறமை அத்தனையையும் உபயோகிக்க வேண்டியதாயிற்று. பொதுவான குற் றங்களான, கொலை, கொள்ளை, திருட்டு, வீடு புகுந்து திருடுதல் ஆகியவை அல்லாமல், மோசடி, நம்பிக்கைத் துரோகம், கள்ள நோட்டு அச்சடித்தல் ஆகியவையும்

ஏற்பட்டன. இவைகளை அடக்க அரசாங்கமும் தனியார்களும் ஏராளமான பணம் செலவழிக்க வேண்டியதாயிற்று. பெண்களைக் கடத்திச் செல்லுதல், விபசாரம், ஆகியவை அதிகம் ஆகிறதாக இருக்கிறது. மேலும் சிறுவர்கள் செய்யும் குற்றமும் அதிகரிக்கும் நிலையில் இருக்கிறது. இப்பிரச்னைகள் நவீன உலகம் தீர்க்க வேண்டியவைகளாகும். பொதுப் பிரச்னைகள், உள்ளூர் தகராறுகள் காரணமாக தொழிற்சாலைப் பகுதிகள், கல்வி நிறுவனங்கள் ஆகிய இடங்களில், சட்டம்-ஒழுங்குப் பிரச்னைகள் நாளுக்கு நாள் அதிகரித்து வருகின்றன. இந்தப் பிரச்னைகளை சாதுரியமாகவும் உறுதியுடனும் போலீசார் சமாளிக்க வேண்டும். பல்வேறு நிகழ்ச்சிகள், நாட்டின் நடப்புகள் காரணமாக அரசியல் கட்சிகள், சாதி நிறுவனங்கள் ஆகியவை நடத்துகிற போராட்டங்களை திறமையுடனும் விழிப்புடனும் சமாளிக்க வேண்டும். இதுபோன்ற போராட்டங்களை திருப்தியுடனும் திறமையுடனும் அடக்க வேண்டியிருந்தால், உடனடி நடவடிக்கை, திறமை, உறுதி ஆகியவை போலீசாருக்கு வேண்டும்.

## போக்குவரத்துப் பிரச்னை

போக்கு வரத்துப் பிரச்னைகளும், அதைச் சேர்ந்த குற்றங்களும் நாளுக்கு நாள் அதிகம் ஆகிவருகின்றன. நகரச் சாலைகளிலும், பெரு வழிகளிலும் ஏராளமான போக்குவரத்து நடை பெறுகிறது. போக்குவரத்துக் கட்டுப்பாடு, போக்குவரத்தை முறைப் படுத்துதல், போக்குவரத்துக்கல்வி ஆகியவைகளைப் பற்றி போலீசார் தீவிர கவனம் செலுத்த வேண்டியவர்களாகிறுர்கள். சாலைகளில் பாதுகாப்பை

அதிகரிக்கவும், போக்குவரத்து நிலைமையைச் சீராக்கவும் போக்குவரத்துப் பொறியியலை, அத்துறை வல்லுனர்கள் மூலம் கற்றுக் கொள்ள வேண்டியிருக்கிறது.

சீனர்களின் எதிர்பாராத ஆக்கிரமிப்பின் போது, நமது மாநில ஆயுதம் தாங்கிய போலீஸ் பிரிவு, நாட்டுப் பாதுகாப்பின் இரண்டாவது அணியாக விளங்கியது. ஆயுதம் தாங்கிய போலீஸ் படையினரும் அதன் அதிகாரிகளும் தங்கள் கடமைகளை தீரத்துடனும் உயர்ந்த முறையிலும் நிறைவேற்றி வருகிறார்கள். போலீஸ் இலாகாவினர், ஊர்காவல் படையினருக்கும் பயிற்சி அளிக்கும் பொறுப்பினை ஏற்றுள்ளார்கள். போலீஸ் படையினர் தங்களுக்குக் கொடுக்கப்பட்ட பணிகளைச் சிறப்பாகச் செய்வது அனைவராலும் பாராட்டுக்கு உரியதாகும்.

## விலையேற்ற விளைவு

மக்களின் அத்தியாவசியப்பொருள்களின் 'திடீர்,' விலையேற்றமும், அதைத் தொடர்ந்து உணவுப் பொருட்களின் மீது விதிக்கப்பட்ட கட்டுப்பாடும் நமது போலீசாருக்கு மேலும் வேலை அளிப்பதாக இருந்தது. ஆனால் அவர்கள் புதிது புதிதாக ஏற்படும் பிரச்னைகளையும், கடமைகளையும் தங்களுடைய வழக்கமான திறமையினால் சமாளித்தது பாராட்டத் தக்கதாகும். அவர்களது பணி எப்பொழுதும் போல பாரட்டத் தக்கதாகவே இருந்தது.

## மதுவிலக்கு

இந்தியாவிலேயே முதன் முதலாக மதுவிலக்குக் கொண்டு வந்த பெருமை நமது மாநிலத்திற்கே

உரியதாகும். 1937-ம் ஆண்டு தமிழ் நாட்டில் மது விலக்கு அமுல் நடத்தப் பட்டது. 1946முதல் 1948 வரை நம் மாநிலத்தில் மாவட்ட வாரியாக மது விலக்கு அமுலாக்கப் பட்டது.

பிராந்திய அடிப்படையில் மூன்று பிரிவாக மது விலக்கு அமுல் நடத்தப் பட்டது. ஆரம்பத்தில் குறிப் பிட்ட சில மாவட்டங்களில் மதுவிலக்கு சிப்பந்தி களாலும், மற்ற மாவட்டங்களில் போலீசாராலும் அமுல் நடத்தப் பட்டது. 1955 ஜனவரி முதல் மது விலக்கை அமுல் நடத்துவது, அதாவது,குற்றங்களைக் கண்டு பிடித்து மதராஸ் மதுவிலக்குச் சட்டத்தின்கீழ் வழக்குகளைப் பதிவுசெய்வது போலீசாரிடம் ஒப் படைக்கப்பட்டது. நமது மாநிலத்தில் மதுவிலக்குச் சட்டத்தை அமுல் நடத்துவது சிறப்பான முறையில் நடைபெற்று வருகிறது.

மற்ற மாநிலங்களில் இருந்து குடிவகைகளைக் கடத்திக் கொண்டு வருவது ஆண்டு தோறும் அதிகரித்து வருகிறது. 1963-ல், 1959-ம் ஆண்டு இருந்த எண்ணிக்கையைப் போல் இருமடங்கு ஆகியிருக்கிறது. இந்த வகையில், சட்டத்தைத் தீவிர மாக அமுல் நடத்துவதன் காரணமாக வெளி மா நிலங்களில் மதுவகைக் கடத்தல் குறைந்து வருகிறது.

கள்ளச் சாராயம் காய்ச்சுவது 1962-ல் அதிக அளவு இருந்தது. கள்ளச் சாராய வழக்குகள் தற் போது குறைந்து வருகிறது. கள்ளச் சாராயம் வைத் திருப்பது, விற்பனை செய்வது ஆகியவை பற்றிய வழக்குகளுடன் சாராயம் காய்ச்சுதல் வழக்குகளை ஒப் பிட்டுப் பார்க்கும்போது இரண்டிலும் எவ்வித ஏற்ற தாழ்வுகள் இல்லை என்று தெரிகிறது. இதன் மூலம்

தெரிவது என்னவென்றால், கள்ளச் சாராயம் காய்ச்சுவது தீவிரமாகத் தடுக்கப் படுவது என்பதே ஆகும்.

### கள் இறக்குதல்

கள் இறக்குதல், பதநீரைப் புளிக்க வைத்தல், லைசன்ஸ் இல்லாமல் பதநீர் இறக்குதல் ஆகியவை பற்றிய வழக்குகள் 1964-ம் ஆண்டில் அதிமாகவே இருந்தன. பதநீர் இறக்கும் காலமான ஏப்ரல், மே, ஜூன் ஆகிய மாதங்களில் தான் இக்குற்றங்கள் அதிகமாக இருக்கின்றன. மற்ற மாதங்களில் இவை மிகக்குறைவே.

கள்ளத்தனமாகக் கடத்தப்பட்டு கொண்டு வரும் மதுவகைகள் பிடிக்கப்படுவதாலும், கள்ளச் சாராயம் காய்சுவது தீவிரமாகத் தடுக்கப்படுவதாலும் இவை அதிகமாவது ஒரு காரணமாகும்.

சாராயம் காய்ச்சுவது, வைத்திருப்பது, விற்பனை செய்வது ஆகியவை பற்றிய குற்றங்களில் ஏற்ற தாழ்வு இல்லாவிட்டாலும், இதுபற்றி ஆராய்ந்த ஆய்வுக் குழுவின் சிபாரிசு இந்த இடத்தில் குறிப்பிடத்தக்கதாகும். "கள் இறக்குவது, கள்ளச் சாராயம் காய்ச்சுவது, கள்ளக்கடத்தல் மூலம் சாராயம் கொண்டு வருவது ஆகிய எந்த முறையில் மதுவிற்பனை செய்யப் பட்டாலும் இவை தடுக்கப்பட முடியாதவை அல்ல. தமிழ் நாட்டில் மதுவிலக்கு தளர்த்தப் படவேண்டியது இல்லை" என்று அந்தக் குழு கூறியதாகும்.

மதுவிலக்கின் காரணமாக வேலை இழந்து வாழ்வதற்கு வழியற்றவர்களுக்கும், முன்பு மது வகைத் தொழிலில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும், வேலை அளிப்ப

தற்கு பனைவெல்ல உற்பத்திக் கூட்டுறவு சங்கங்கள் மாவட்டங்களில் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இவை அனைத்தும் மாநில கதர் கிராமக் கைத்தொழில் போர்டின் கீழ் பணியாற்றுகின்றன.

நிலக்காலனி கூட்டுறவு சங்கங்கள், விவசாயக் கூட்டுறவு சங்கங்கள், நெசவாளர் கூட்டுறவு சங்கங்கள், பல நோக்குக் கூட்டுறவு சங்கங்கள் ஆகியவைகள் மூலமாகவும் இதனால் பாதிக்கப்பட்டவர்களுக்கு வேலை வாய்ப்பும் மற்ற உதவிகளும் அளிக்கப்படுகின்றன.

## கிராமக் காவல்

மாவட்ட வளர்ச்சி மன்றங்கள், தாலூகா மதுவிலக்குக் கமிட்டிகள் ஆகியவை மதுவிலக்கை சரியான முறையில் அமுல் நடத்துவதுபற்றி ஆலோசனைகள் கூறிவருகின்றன. கிராமக் காவல் கமிட்டிகளும் அமைக்கப்பட்டுள்ளன. இந்தக் கமிட்டிகள் குறிப்பிட்ட காலங்களில் கூடி மதுவிலக்கு அமுல் பற்றி ஆலோசனை கூறுகின்றன.

நமது மாநிலத்தில் கடந்த 15 ஆண்டுகளுக்கு மேலாக மதுவிலக்கு அமுல் நடத்தப்பட்டு நல்ல முறையில் நடந்து வருகிறது. இதை அமுல் நடத்துவது திருப்தியுடன் இருக்கிறது என்று மதுவிலக்கு பற்றி "டேக்சந்த் கமிட்டி" கூறியிருப்பதை இவ்விடத்தில் கூறுவது பொருத்தமாக இருக்கும்.

# ஹரிஜன நலன்

ஹரிஜனமக்கள் முன்னேற்றத்திற்காக நமது மாநில அரசாங்கம் சென்ற 1949-ல் இருந்தே திட்ட மிட்டு பணிபுரிந்து வந்திருக்கிறது. "ஹரிஜன நல இலாகா" என்ற ஒரு தனி இலாகாவை ஏற்படுத்தி அரசாங்கம் ஹரிஜன மக்களுக்காக பல நன்மைகள் செய்து வருகிறது.

மத்திய அரசாங்க உதவியாலும், மற்ற இலாகாக் களின் கூட்டுறவாலும், ஹரிஜன இலாகா, ஹரிஜன மக்களுக்காக பல்வேறு நன்மைகளைச் செய்து அவ்வகுப்பினரை முன்னேற்றம் அடையச் செய்து வருகிறது. கடந்த 15 ஆண்டுகளாக இவ்வகுப்பி னரின் சமூக பொருளாதார முன்னேற்றத்தில் புதிய சகாப்தம் உதயமாகி வருவது குறிப்பிடத்தக்க தாகும்.

ஹரிஜன மக்களின் நலத்திற்காகச் செலவு செய் யப்பட்ட தொகையில் இருந்து அவர்களுக்குச் செய் யப்பட்ட நன்மையைப்பற்றி விவரமாக அறியலாம். மொழிவாரி மாகாணம் பிரிக்கப்படாமல் இருந்தபோது

அதாவது 1550-51ம் ஆண்டில் ஹரிஜன நலனுக்காகச் செலவு செய்யப்பட்ட தொகை ரூ. 69 லட்சமாகும். இவ்வகுப்பினருக்காகச் செலவிடப்பட்ட தொகை மேலும் வளர்ந்தது. 1964-65 வாக்கில் ரூ. 446 லட்சம் செலவாகியிருப்பதே இத்துறையில் அரசாங்கத்தின் பணியை நன்கு புலப்படுத்தும்.

இந்த இலாகாவின் சிறப்பான சேவை கீழ்க்கண்டவைகள் மூலம் நன்கு அறியலாம்:

## உயர்வான நிலை

ஹரிஜன நலனில் தீண்டாமையை ஒழித்து அவ்வகுப்பினரை, சமூகத்தின் மற்ற பிரிவினர் இருக்கும் நிலைக்கு உயர்த்துவது மிக முக்கியமானதாகும்.

இந்தப் பிரச்னையில் அரசாங்கம் தீவிர கவனம் செலுத்தியது. அரசியல் சட்டத்தின் 17-வது பிரிவு தீண்டாமையை ஒழிக்கும் பிரிவாகும். தீண்டாமையை அனுசரிப்பது 1955-ம் ஆண்டு தீண்டாமை ஒழிப்புச் சட்டப்படி தண்டனைக்கு உரியதாகும். சட்டத்தைத் தீவிரமாக அமுல் நடத்துவதுடன்- மக்களின் மனதை- குறிப்பாக சாதி இந்துக்களின் எண்ணத்தை மாற்றுவது தீண்டாமை ஒழிப்பில் மிக முக்கியமானது என்பதை அரசாங்கம் உணர்ந்தது. இவற்றைக் கருத்தில் வைத்து தீண்டாமையை ஒழிக்க அரசாங்கம் பல்வேறு நடவடிக்கைகளை எடுத்து வருகிறது.

தீண்டாமை ஒழிப்புத் திட்டத்தில் விளம்பரமும் பிரசாரமும் முக்கியமான இடத்தைப் பெற்றுள்ளன. தீண்டாமை ஒழிப்புப் பிரசாரம் செய்வதற்காக மாநிலம் முழுவதும் துணை சேவக்குகள் நியமிக்கப்பட்டார்கள். இவர்களைத் தவிர மாநிலம் முழுவதும்

சுற்றுப்பிரயாணம் செய்யக்கூடிய விசேஷ துணை சேவக்குகளும் நியமிக்கப்பட்டார்கள். இவர்கள் "வில்லுப்பாட்டு" மூலம் மாநிலம் எங்கும் பிரசாரம் செய்துவருகிறார்கள்.

## பரிசுத் திட்டம்

தாழ்த்தப்பட்டோர் லீக், ஹரிஜன சேவா சங்கம் போன்ற உத்யோகப் பற்று அற்ற நிறுவனங்களும் தீண்டாமையை எதிர்த்து பிரசாரம் செய்து வந்தன. தீண்டாமை ஒழிப்பில் புதிய சாதனைகள் செய்த கிராமங்கள், சுகாதாரமாகவும், சுத்தமாகவும் உள்ள கிராமங்கள் ஆகியவைகளுக்குப் பரிசு கொடுக்கும் திட்டங்களும் மேற்கொள்ளப் பட்டன. பல்வேறு தாலூகாக்களில் சமுதாய நிலையங்கள், சமுதாய அரங்குகள் அமைப்பதும் இத்திட்டத்தின் ஒரு பகுதியாகும். மாநிலத்தில் தற்போது 25 சமுதாய நிலையங்களும், 20 சமுதாய அரங்குகளும் உள்ளன.

ஒவ்வொரு மாதமும் 30—ம் தேதி அன்று கிராமங்களிலும் நகரப் பகுதிகளிலும் ஹரிஜன தினம் கொண்டாடப்படுகிறது. பிப்ரவரியில் அந்த மாதத்தின் கடைசிநாள் அன்று இத்தினம் கொண்டாடப்படுகிறது. ஆண்டுக்கு ஒருமுறை ஜனவரி மாதத்தில் மாநிலம் முழுவதும் ஹரிஜனவாரம் கொண்டாடப்படுகிறது.

விளம்பரம், பிரசாரம் ஆகியவைகளுக்காக முதல் திட்டகாலத்தில் ரூ.4.08 லட்சம் செலவழிக்கப்பட்டது. இரண்டாவது திட்டத்தின் போது செலவு ரூ.17.19

லட்சமாக உயர்த்தப் பட்டது. மூன்ருவது திட்ட காலத்தில் இதற்கான செலவு ரூ.19.35 லட்சம் ஆகும் என்று மதிப்பிடப் படுகிறது.

**பள்ளிக் கூடங்கள்**

தகுதியுடைய வகுப்பினர், மலைஜாதி மக்கள், அட்டவணையில் இருந்து நீக்கப்பட்ட வகுப்பினர் ஆகியோர் குழந்தைகளின் பொருளாதார முன்னேற்றத்திற்காக ஹரிஜன நல இலாகா பள்ளிக்கூடங்கள் நடத்துகிறது. அரசாங்கத்தின் கொள்கை காரணமாக பிற்பட்ட வகுப்பினர் குழந்தைகளுக்கு மட்டும் தனியாகப் பள்ளிக்கூடம் திறக்கப்பட வில்லை. எல்லா வகுப்பினரும் ஜாதிமத வேறுபாடு இன்றி ஒரே வகுப்பினராய் ஒன்று கலந்து படிக்க வேண்டும் என்ற கருத்துடன் ஹரிஜன நல இலாகா பள்ளிக் கூடங்களை நடத்துகிறது. இப்பள்ளிக் கூடங்களில் எல்லா வகுப்பினரும் சேர்ந்து படிக்க வசதி செய்யப்பட்டுள்ளது. இந்த இலாகாவினர் தற்போது 1171 பள்ளிகூடங்கள் நடத்துகிருர்கள்.

பள்ளிக் கூடத்திற்குக் குழந்தைகள் ஒழுங்காக வரச் செய்ய வேண்டும் என்ற நோக்கத்துடன், ஒழுங்காக பள்ளி செல்லும் குழந்தைகளுக்குப் பரிசுகள் கொடுக்கப்படுகின்றன. இத்தகைய பள்ளிகளின் ஆசிரியர்களுக்கும் பரிசு கொடுக்கப்படுகிறது.

பாடங்களில் மாணவர்கள் தீவிர கவனம் செலுத்த வேண்டும் என்ற நோக்கத்துடன், ஒவ்வொரு ஆண்டும் எஸ். எஸ். எல். சி. பரீட்சையில் முதலாவதாக, இரண்டாவதாக தேர்ச்சி பெறும் ஹரிஜன மாணவர்களுக்கு பிரீமியம் பரிசுப் பத்திரங்கள் பரிசாக அளிக்கப்படு

கின்றன. ஹரிஜன நலப் பள்ளிக்கூடங்களில் படிக்கும் பெண்களுக்கு இலவச உடைகளும் வழங்கப்படு கின்றன. ஆண்டு ஒன்றுக்கு 2 ரவிக்கைகளும் 2 பாவா டைகளும் அவர்களுக்கு வழங்கப்படுகின்றன.

## மதிய உணவுத் திட்டம்

தகுதி பெற்ற வகுப்பினரின் குழந்தைகள் ஐந்தா வது ஸ்டாண்டர்டு வரை படித்து பூரண கல்வி அறிவு உள்ளவர்களாக இருக்க வேண்டும் என்பதற்காக 1950—ம் ஆண்டு மதிய உணவுத் திட்டம் பரீட்சார்த்த மாகக் கொண்டு வரப்பட்டது. இத்திட்டம் வெற்றிகர மாக இருந்ததால் 1954—ம் ஆண்டு மாநிலம் முழுவதும் அது விஸ்தரிக்கப் பட்டது.

ஹரிஜனங்களுக்கென்று அல்லாத சில குறிப்பிட்ட பள்ளிகளில் படிக்கும் ஹரிஜன மாணவர்களுக்கும் மதிய உணவு அளிக்கப்படுகிறது. ஹரிஜன நல இலாகாவினுல் நடத்தப்படும் அட்டவணையில் இருந்து நீக்கப்பட்ட பிரிவினருக்கான பள்ளிகள், கள்ளர்களுக்கான பள்ளிகள் ஆகியவைகளில் படிக்கும் குழந்தைகளுக்கும் மதிய உணவு அளிக்கப்படுகிறது.

## புதிய ஹாஸ்டல்கள்

தகுதி பெற்ற வகுப்பினர் குழந்தைகளின் நன்மையை உத்தேசித்து ஆண்டுதோறும் புதிய ஹாஸ்டல்களை அரசாங்கம் திறந்து வருகிறது.

தாழ்த்தப்பட்ட வகுப்பினர், மலை ஜாதி மக்கள், அட்டவணையில் இருந்து நீக்கப்பட்ட வகுப்பினர், மற்ற பிற்பட்ட வகுப்பினருக்காக முதலாவது ஐந் தாண்டுத் திட்டத்தில் மொத்தம் 37 ஹாஸ்டல்களும்,

இரண்டாவது திட்டத்தில் 195 ஹாஸ்டல்களும் திறக்கப்பட்டன. மூன்றாவது திட்டத்தில் மொத்தம் 396 ஹாஸ்டல்கள் திறக்கப்படும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

தனிப்பட்ட நபர்கள் அல்லது சங்கங்கள் ஹாஸ்டல் நடத்துவதையும் அரசாங்கம் ஊக்குவிக்கிறது. ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையினருக்கு மொத்தமான மானியத் தொகையை அரசாங்கம் இந்த வகையில் அளிக்கிறது. மேலே குறிப்பிட்ட பிரிவினருக்கான ஹாஸ்டல் எண்ணிக்கை முதல் திட்ட காலத்தில் 429. இரண்டாவது திட்ட காலத்தில் 325. இது போன்ற உதவி பெறும் ஹாஸ்டல்களை அரசாங்கம் ஒரு கால கெடுவுக்கு உட்பட்டு தானே எடுத்துக் கொள்கிறது.

ஆரம்பக்கல்வி முதல் பல்கலைக் கழகப்படிப்பு வரை பெற தாழ்த்தப்பட்டவர்கள், மலை ஜாதி மக்கள் ஆகியோர்க்கு படிப்பு உதவிப் பணம் அளிக்கப்படுகிறது. அரசாங்கத்தாரால் அங்கீகரிக்கப்பட்ட ஹாஸ்டல்களில் தங்கிப் படிக்கிறவர்களுக்கு அதற்கான படிப்பு உதவிப் பணம் அளிக்கப்படுகிறது. சட்டம், ஆசிரியர் படிப்பு (**B.T**), பிரியூனிவர்சிடி வகுப்பு ஆகியவை படிக்கப் படிப்பு உதவிப் பணம் அளிக்கப்படுகிறது.

முதலாவது ஐந்தாண்டு திட்ட காலத்தில் ஒரு லட்சத்து 11 ஆயிரம் பேர்களுக்கும், இரண்டாவது திட்டகாலத்தில் இரண்டு லட்சத்து 95 ஆயிரம் பேர்களுக்கும் படிப்பு உதவிப் பணம் அளிக்கப் பட்டது. இதற்கு முதல் திட்ட காலத்தில் 96.34 லட்ச ரூபாயும், இரண்டாவது திட்ட காலத்தில் 193.19லட்ச ரூபாயும், செலவழிக்கப்பட்டன.

## விவசாய உதவித் திட்டங்கள்

தாழ்த்தப்பட்ட வகுப்பினர், மலைஜாதி மக்கள், அட்டவணையில் இருந்து நீக்கப்பட்டவர்கள் ஆகியோரின் பொருளாதாரத்தை உயர்த்துவதற்காக விவசாய உதவித் திட்டங்கள் பல போடப்பட்டுள்ளன. இவர்கள் அனைவரும் விவசாயிகளாக அல்லது விவசாயத்திற்கான வேலைகளைச் செய்கிறவர்களாகவோ இருக்கிறார்கள். குறைந்த அளவு இரண்டு ஏக்கர் நிலம் வைத்திருந்து பாசனத்திற்கு கிணறு தேவைப்படுகிறவர்களுக்கு கிணறு வெட்ட உதவித் தொகை அளிக்கப்படுகிறது. உழுவதற்கான ஒரு ஜோடி மாடுகளும்,விவசாயக்கருவிகளும் அவர்களுக்கு அளிக்கப்படுகிறது. பிற்பட்ட வகுப்பினரைச் சேர்ந்த விவசாயிகளின் வாழ்க்கை நிலையை உயர்த்த இது போன்ற உதவிகள் நல்ல பலன் அளிக்கும். இரண்டாவது திட்டகாலத்தில் 94.57 லட்ச ரூபாய் இந்த வகையில் செலவு செய்யப் பட்டது குறிப்பிடத் தக்கதாகும்.

## அரசாங்கப் பங்கு முதல்

தாழ்த்தப்பட்டவர் நலனுக்காக அரசாங்கத்தில் பங்கு முதல் போடப்பட்டு நிதி உதவி அளிக்கப்படுகிறது. செங்கல் செய்தல், பாய் பின்னுதல், தோல் சம்பந்தப்பட்ட தொழில், தோல் பதனிடுதல், கைக்குத்தல் அரிசி போன்ற குடிசைத்தொழில் கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப் பட்டுள்ளன. மண்பாண்டத் தொழில், கருமார் தொழில், தச்சுத் தொழில், பாய் பின்னுதல் போன்றவைகளின் உற்பத்தி—பயிற்சி நிலையங்களும் இவ்வகுப்பினர் நலனுக்காக அமைக்கப் பட்டுள்ளன. ஹரிஜனங்களுக்கான தொழில் கூட்டுறவு நிறுவனங்கள் அமைப்பதை ஊக்குவிக்கவும்,

அவர்களுடைய பொருளாதார அமைப்பை உறுதிப் படுத்தவும் அவர்கள் பங்கு முதலில் 75 சதவிகிதம் உதவித் தொகை அளிக்க அரசாங்கம் அனுமதித் துள்ளது. ஒரு அங்கத்தினரின் பங்கு மதிப்பு அதிக அளவு ரூ. 15 இருக்கும்படி இத்தொகை அளிக்கப்படு கிறது. ஈரோடில் தாழ்த்தப்பட்டவர்கள் நடத்தும் கூட்டுறவு மோட்டார் போக்கு வரத்து சங்கம் குறிப் பிடத் தகுந்ததொன்ருகும். அரசாங்கம் இதற்கு நிதி உதவியும், சிப்பந்திகள் உதவியும் அளித்துள்ளது.

இவைகள் அல்லாமல் இதில் கூறப்பட்ட பிற்பட்ட வகுப்பினரின் பெண்கள் நலனுக்கான நிலையங்களும் பராமரிக்கப்படுகின்றன. இந்த வகுப் பினரின் பொருளாதார நிலையை அபிவிருத்தி செய் யும் வகையில் அவர்கள் ஒரு குறிப்பிட்ட தொழில் பயிற்சி பெற்ற பிறகு அந்தத் தொழிலுக்கான கருவிகள், உபகரணங்கள் ஆகியவை இனமாகக் கொடுக்கப்படுகின்றன. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் இவ்வகுப்பினரில் 4,945பேர்களுக்குக் கருவிகளும், மற்ற உபகரணங்களும் அளிக்கப்பட் டுள்ளன. மூன்ருவது திட்ட காலத்தில் மேலும் அதிக மான பேர்கள் இதனுல் பலன் அடைவார்கள்.



### வட்டி இல்லாக் கடன்

சவரத் தொழிலாளர்கள், சலவைத் தொழிலா ளர்கள் ஆகியோரின் நிலைமையையும் கருத்தில் கொண்டு அரசாங்கம் அவர்களுக்கும் உதவி அளித்து வருகிறது. இவர்களுக்கு வட்டியில்லாக் கடன் அளிக் கப்படுகிறது. ஒவ்வொரு ஆண்டும், மாவட்டவாரியாக 100 சவரத் தொழிலாளர்களுக்கும், 120 சலவைத் தொழிலாளர்களுக்கும் தலா முறையே ரூ.53-ம் ரூ. 50-ம்

கொடுக்கப்படுகிறது. தங்களுடைய தொழிலுக்கு கருவிகள் வாங்குவதற்காக இத்தொகை அவர்களுக்குக் கொடுக்கப்படுகிறது.

ஹரிஜனங்களின் பொருளாதாரத்தை உயர்த்துவதில் உதவுவது பால் பண்ணைத் தொழிலும் ஒன்றுகும். பால் வழங்கும் சங்கங்கள் அமைக்க அரசாங்கம் அவர்களுக்கு நிதி உதவி அளித்து வருகிறது. இரண்டாவது திட்ட காலத்தில் பால் கறக்கும் கால்நடைகள் வாங்குவதற்காக 207 ஹரிஜனங்களுக்கு ரு. 15,530 வழங்கப்பட்டது. இத்திட்டம் வெற்றிகரமாக இருப்பதால் மூன்ருவது திட்டகாலத்தில் இதற்கு மேலும் ஊக்கம் அளிக்கப்படுகிறது. 1962—63ம் ஆண்டில் ரூ. 3·5 லட்சம் இந்தவகையில் செலவுசெய்யப்பட்டது. தற்போது பிற்பட்ட வகுப்பினருக்காக நாட்டில் 151 கூட்டுறவு பால்பண்ணைகள் உள்ளன. இந்த எண்ணிக்கை மூன்ருவது ஐந்தாண்டு காலத்தில் தேவையைப் பொறுத்து மேலும் உயரலாம்.

சாகுபடிக்குப் பொருத்தமான நிலங்களின் தேவையை முன்னிட்டு மாநிலத்தில் உள்ள எல்லா செழிப்பான நிலங்களும் சாகுபடிக்குக் கீழ் கொண்டு வரப்பட்டுள்ளன. ஹரிஜனங்கள் மற்றும் தாழ்த்தப்பட்ட வகுப்பினர்கள் நலனுக்காக இரண்டாவது ஐந்தாண்டு திட்டகாலத்தில் கூட்டுறவு முறையில் நிலக் காலனித்திட்டம் ஆரம்பிக்கப்பட்டுள்ளன. இத்திட்டம் மூன்ருவது ஐந்தாண்டுத் திட்டத்திலும் சேர்க்கப்பட்டுள்ளது. இதுவரை 53 சங்கங்களுக்கு உதவி அளிக்கப்பட்டுள்ளன. இந்த வகையில் இதுவரை 12585 ஏக்கர் நிலம் சாகுபடிக்கு ஏற்றதாகச் செய்யப்பட்டுள்ளது.

## வீட்டு வசதி

வீடு கட்டிக்கொள்ளச் சொந்த நிலம் இல்லாத வர்கள் பணம்போட்டு நிலம் வாங்க முடியாதவர்கள் ஆகிய ஹரிஜனங்களுக்கு அரசாங்கம் விலை இல் லாமல் வீடு கட்ட இடம் கொடுக்கிறது. ஒவ்வொரு குடும்பத்திற்கும் நன்செய் நிலப்பகுதிகளில் 3 சென்ட் நிலமும், புன்செய் நிலப் பகுதிகளில் 5 சென்ட் நிலமும் அளிக்கப்படுகின்றன. முதல் ஐந்தாண்டு திட்டக் காலத்தில் வீடு கட்டிக் கொள்ளும் இடங்கள் 2208ம், இரண்டாவது திட்டகாலத்தில் 43339ம் ஹரி ஜனக் குடும்பங்களுக்கு அளிக்கப்பட்டுள்ளன.

வீடு கட்டிக்கொள்வதற்காக நில ஆர்ஜிதம்செய்த வகையில் 1962—63-ம் ஆண்டில் ரூ, 19,24,724 செலவு செய்யப்பட்டுள்ளது.

ஏழை ஹரிஜனங்களுக்கு வீடுகட்ட நிலம் அளித்து விட்டால் மட்டும் எல்லாம் முடிந்ததாகிவிடாது. அதில் வீடு கட்டிக்கொள்ளவும் அம்மக்களுக்கு வசதி செய்து கொடுக்கப்பட வேண்டும். மூன்ருவதுதிட்டகாலத்தில் அரசாங்கம் ரூ. 1000 செலவில் வீடுகட்டும். இதில் ரூ. 750 உதவித் தொகை ஆகவும் மீதி பணம் இதனுல் பயனடைவோர் தருவதாகவும் இருக்கும். பயனடை வோர் தரக்கூடிய தொகை பணமாகவோ, மற்ற பொருளாகவோ அல்லது உழைப்பாகவோ இருக்கும்.

## குடிநீர் வசதி

சுகாதார வசதித் திட்டங்களில் குடி தண்ணீர் வசதி அளித்தல் மிக முக்கியமான தொன்ருகும். எங்கெங்கு தேவையோ அங்கெல்லாம் பழைய கிணறு கள் புதுப்பிக்கப்பட்டு, புதிய கிணறுகள் வெட்டப் படுகின்றன. பஞ்சாயத்துக்களின் திட்டமிடப்பட்ட

வரவு செலவுத் திட்டத்தில் குடி தண்ணீர் அளிப்பது மிக முக்கியமானது என்றாலும், எங்கெங்கு இது உடனடித் தேவையோ அங்கெல்லாம் ஹரிஜன நல வரவு செலவுத்திட்டத்தின் கீழ் இவ்வசதிகள் செய்யப் பட்டு வருகின்றன. குடிதண்ணீர் அளிப்புத் திட்டத் துடன் பாதை வசதி, சுடுகாடு வசதி, சிறு பாலங்கள் குளிக்கும் அறைகள், கக்கூஸ்கள் ஆகியவையும் கட்டப்படுகின்றன. 1963—64ல் குடிநீர் கிணறுகள் வெட்ட ரூ. 4·54 லட்சம் செலவு ஆயிருக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. கிராம வேலை மானியத்தின் கீழ் இணைப்புச் சாலைகள், பள்ளிக்கூடக் கட்டிடங்கள் அமைத்தல் ஆகிய வேலைகள் செய்யப்படுகின்றன.

இந்த வேலைகள் அனைத்தும் அப்பகுதி மக்களின் உதவித் தொகையுடனும் நடைபெறும். ஆனால் குடி தண்ணீர் வசதி விஷயத்தில் ஹரிஜனங்களிடமிருந்து எந்த உதவித் தொகையும் எதிர்ப்பார்ப்பதில்லை. ஹரிஜனங்களுககு நலன் அளிக்கும் இதுபோன்ற வேலைகளை பஞ்சாயத்துகள் எடுத்துக் கொள்வதை ஊக்குவிப்பதற்காக ஹரிஜன நல நிதியில் இருந்து பஞ்சாயத்துகளுக்கு அரசாங்கம் நிதி ஒதுக்கீடு செய்துள்ளது. கிராம வேலை மானியத்தில் இருந்து 20 சத விகித நிதியை ஹரிஜன நலத்திற்கு செலவிடும் வகையில் இவ்வாறு நிதி ஒதிக்கீடு செய்யப்படுகிறது.

**மின்சார வசதி**

ஹரிஜன காலனிகளுக்கு மின்சார வசதி அளிப்பதி லும் கவனம் செலுத்தப் படுகிறது. பஞ்சாயத்து அல்லது நகராட்சிகளில் மின்சார வசதி செய் வதற்காக திட்டமிடும்போது ஹரிஜனங்கள் வசிக்கும் பகுதிகளுக்கும் சேர்த்துத்தான் திட்டமிட வேண்டும் என்றும், தகுந்த காரணம் அன்னியில் அப்பகுதிகள்

ஒதுக்கப்படக் கூடாதென்றும் உத்தரவுகள் போடப் பட்டுள்ளன.

1957—58-ல் இருந்து 1962—63 வரை 952 ஹரிஜன காலனிகளில் மின்சார வசதி செய்யப்பட்டுள்ளன. இதற்கான மொத்தச் செலவு ரூ. 10,58194 ஆகும்.

தனிப்பட்டவர்கள் இடங்களில் வசிக்கும் ஹரிஜனங்கள் அற்பமான சில காரணங்களுக்காக வெளியேற்றப்படுகிறுர்கள் என்பது அரசாங்கத்தின் கவனத்திற்குக் கொண்டுவரப்பட்டது. வறுமையின் காரணமாக அவர்களால் கோர்ட்களில் வழக்காடவும் முடியவில்லே. இதுபோன்ற நிலேமையில் ஹரிஜனங்களுக்கு இலவச சட்ட உதவி அளிக்க அரசாங்கம் ஒரு திட்டத்தை அங்கீகரித்துள்ளது.

அரசாங்கம் மலே ஜாதி மக்களுக்காக மூன்று நட மாடும் மருத்துவ யூனிட்டுகளே அமைக்க ஒப்புதல் அளித்திருக்கிறது. இவற்றில் ஒன்று நீலகிரியிலும், அடுத்தது மதுரையிலும் மற்ருென்று வடஆர்க்காட்டிலும் செயலாற்றும். இவ்வகுப்பினர் தங்கள் வீட்டிலேயே உடனடித் தேவையான மருத்துவ வசதிகள் பெறுவதற்கு இந்த ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. "நடுகல் கும்பை" என்ற இடத்தில், ரூ.89,000 செலவில் வீடு, குடிநீர் பள்ளிக்கூடம் ஆகிய எல்லா வசதிகளும் நிறைந்த ஒரு "மாதரி" கிராமம் மலேஜாதி மக்களுக்காக அமைக்கப்பட்டுள்ளது.

### விற்பனேக் கூட்டுறவு சங்கம்

மலேஜாதி மக்களில் நவினமானவர்கள் காடுகளில் வாழ்ந்து அங்கு கிடைக்கும் பொருள்கள் மூலம் வாழ்க்கை நடத்தி வருகிறுர்கள். இவர்களுடைய

உற்பத்திப்பொருள்களை விற்பனை செய்ய 9 விற்பனைக கூட்டுறவு சங்கங்கள் அமைக்கப் பட்டுள்ளன. மூன்ருவது திட்டத்தில், இதுபோன்ற கூட்டுறவு சங்கங்கள் அமைக்க ரூ. 2லட்சம் அனுமதிக்கப் பட்டுள்ளது.

ஆண்டுதோறும், ஒவ்வொரு திட்டத்திலும் ஹரிஜன நலஇலாகாஹரிஜனங்களுக்கான வசதிகளை அதிகரித்து வருகிறது. மொழிவாரி மாகாணம் பிரிக்கப் படாத தற்கு முன்பு சென்னை மாகாணத்தில் ஹரிஜனநலனுக் காகச் செலவிடப்பட்ட தொகை ரூ.69 லட்சம். ஆனுல் இரண்டாவது ஐந்தாண்டு திட்ட இறுதியில் இது ரூ3.5 கோடியாக உயர்ந்தது குறிப்பிடத் தக்கதாகும்.

சமூகத்தில் தாழ்த்தப் பட்ட வகுப்பினர் மற்றவர் களைப் போல எல்லா நலன்களையும் பெற வேண்டும் என்பதுதான் அரசாங்கத்தின் விருப்பம். ஹரிஜன மக்களுக்கு ஹரிஜன நல இலாகா செய்துள்ள சேவை சிறப்பானதாகும். இதன் மூலம் அவ்வகுப்பினரும், மற்ற வகுப்பினரைப் போல முன்னேற்றம் அடை வார்கள். அவர்களுடைய சமூக பொருளாதார நிலையும் உயர்வடையும். இந்த வகையில் இன்னும் ஏற்படப் போகிற முன்னேற்றங்கள் நமது தேசப்பிதா ஹரிஜன மக்கள் முன்னேற்றம் பற்றி கண்ட கனவுகளை நன வாக்கும் என்பதில் சந்தேகம் இல்லை.

# நமது பெரியபணி

எல்லையில் சீனரின் அக்கிரமமான ஆக்கிரமிப்பினுல் பாரதநாடு கொதிப்படைந்துள்ளது: எண்ணற்ற தியாகங்கள் செய்து பெற்ற சுதந்திரத்தைப் பாதுகாக்க மக்கள் வீறு கொண்டுள்ளனர். பெருமை மிகுந்த இந்தநாடு, தனது தர்ம பலத்தால் எவ்வளவோ சோதனைகளில் இருந்து மீண்டுள்ளது. அதே போல இந்தச் சோதனையிலும் பாரதம் வெற்றி பெறும் என்பதில் சந்தேகமில்லை.

## பெரும்பணி

சீனரைத் துரத்தியடிக்கும் பெரும் பணியில் நாடு ஈடுபட்டுள்ளது. தேசப் பாதுகாப்பு ஒன்றுதான் நம்முடைய தலையாய பணி. மற்ற எல்லா வேலைகளும் தேசப் பாதுகாப்பு என்ற மையத்தை நோக்கியே இயங்க வேண்டும். போர் வீரர்களுக்கும், அத்தியாவசியப் பணிகளில் ஈடுபட்டிருப்பவர்களுக்கும் எல்லா வசதிகளும் கிடைக்கச் செய்ய வேண்டும். உற்பத்திப் பெருக்கு என்பது தேசப் பாதுகாப்புப் பணியிலிருந்து

வேறு பட்டதல்ல. உற்பத்தியைப் பெருக்குவது, பாது காப்பு வேலைகளில் ஒரு அங்கமே ஆகும்.

நம்மைத் தாங்கும் இந்தத் தாயகத்தின் மண் பொன்னான மண். இந்த மண்ணுக்கு உரமும் நீரும் வேண்டுமளவு சேர்த்து உற்பத்தியை ஒன்றுக்குப் பலவாகப் பெருக்கமுடியும். என்றுமே இல்லாத அளவுக்கு வேளாண்மை உற்பத்திப் பெருக்கம் ஏற் பட்டாக வேண்டியிருக்கிறது. அயல் நாடுகளில் இருந்து ஆயுதங்கள், தளவாடங்கள் போன்ற முக்கிய பொருள்கள் அதிகம் வரவேண்டியிருப்பதால் தானி யங்கள் கொண்டுவருவது இயலாது.

தமிழ் நாட்டின் நிலவளம், நீர் வளத்திற்கு ஏற்ப தானியங்கள், பயறு வகைகள், காய்கறிகள், உருளைக் கிழங்கு, பழங்கள் முதலியவைகளைத் தீவிரமாகச் சாகுபடி செய்ய வேண்டும்

# வேளாண்மை உற்பத்தியில் தமிழ்நாடு

வேளாண்மை உற்பத்திப் பெருக்கத்தில் தமிழ் நாடு இந்தியாவில் ஏற்கனவே முன்னணி மாநிலங் களில் ஒன்ருக விளங்குகிறது. முதலாவது, இரண் டாவது திட்ட காலங்களில் உற்பத்தி கணிசமாக அதிகரித்துள்ளது. முதல் ஐந்தாண்டுத் திட்ட ஆரம்பத்தில் 38 லட்சம் டன்ஞக இருந்த உணவு உற்பத்தி இரண்டாம் திட்ட முடிவில் 53 லட்சம் டன்களாக உயர்ந்தது. பஞ்சு உற்பத்தி இரண்டு லட்சத்து இருபத்தாருயிரம் பேல்களில் இருந்து மூன்று லட்சத்து எழுபத்து நாலாயிரம் பேல்களாக அதிகரித்தது. எண்ணெய் வித்துக்கள் உற்பத்தி எட்டு லட்சம் டன்களில் இருந்து 10லட்சத்து நாற்பதாயிரம் டன்களாக அதிகரித்தது. மூன்ரும் திட்டத்தில் உணவு தானிய உற்பத்தியை 69½லட்சம் டன் அளவுக்கு உயர்த்த வேலைகள் நடைபெற்று வருகின்றன. பஞ்சு உற்பத்தியை 5லட்சத்து எழுபதாயிரம் பேல்களா கவும், எண்ணெய் வித்துக்கள் உற்பத்தியை 13½

லட்சம் டன்களாகவும் அதிகரிக்க திட்டங்கள் மேற்கொள்ளப் பட்டுள்ளன.

உற்பத்தியைப் பெருக்குவதற்காக, அரசாங்கம் குடியானவர்களுக்கு, பல வழிகளில் உதவுகின்றது. அதிகமான பலன்தரும் பொறுக்கு விதைகள் வழங்கப் படுகின்றன. தழை உரச்செடி விதைகள், 15சதவீதம் குறைந்த விலையில் தரப் படுகின்றன. கம்போஸ்டு உரம் தயார் செய்வதற்காக, உரக்குழு ஒன்றுக்கு ரூ. 6 வீதம் மானியம் அளிக்கப்படுகிறது. கம்போஸ்டு உரம் தயாரிக்கும் பஞ்சாயத்துகளுக்குக் கடன் உதவி அளிக்கப் படுகிறது. அமோனியம் சல்பேட், யூரியா, சூப்பர் பாஸ்பேட், பொட்டாஷ் முதலிய ரசாயன உரங்கள் வழங்கப் படுகின்றன. அந்த உரங்களை வாங்கக் கடனும் அளிக்கப் படுகிறது. பயிர் பாது காப்புக்காக பூச்சி மருந்துகள் சலுகை விலையில் வழங்கப் படுகின்றன. பழச் செடிகள் பயிரிடக் கடன் உதவி அளிக்கப் படுகிறது. டிராக்டர்கள், பம்பு செட்டுகள், வாங்கக் கடன் உதவி தரப் படுகிறது.

இந்த வசதிகளைத் தமிழ் நாட்டுக் குடியானவர்கள் நல்லமுறையில் பயன் படுத்தி உற்பத்தியை பெருக்கி இருக்கிறுர்கள். தற்சமயம் ஏக்கர் ஒன்றுக்கு சராசரி 2016 ராத்தல் நெல் விளைகிறது. ஏக்கர் ஒன்றுக்கு தானிய உற்பத்தி சுமார் 60 சதவிகிதம் அதிகரித்துள்ளது. 60சதவிகித உயர்வு என்ற நிலைமாறி விளைச்சலை இரட்டிப்பாக்கவும் முடியும்.

நாட்டின் உரிமைக்கு ஏற்பட்டுள்ள அபாயத்தை நினைவு கூர்ந்து குடியானவர்கள் முனைந்து பாடு படுவது அவசியமாகும்.

## தீவிரச் சாகுபடி திட்டம்

தமிழ் நாட்டின் நெற்களஞ்சியமான தஞ்சை மாவட்டத்தில் சுமார் 15 லட்சம் ஏக்கரில் நெல்சாகுபடி ஆகிறது. தஞ்சை நீர்வளம், நிலவளம் நன்கு அமைந்த பூமி. அங்கு ஏக்கர் விகித விளைவை கால்பங்கு அதிகரிக்க 1960-ல் தீவிரச் சாகுபடித் திட்டம் 2¼ லட்சம் ஏக்கர் நிலத்தில் ஆரம்பிக்கப்பட்டது. 1961-ல் இத்திட்டம் 3,4300 ஏக்கருக்கு விஸ்தரிக்கப் பட்டுள்ளது. இந்தத் தீவிரச் சாகுபடித் திட்டத்தின் மூலம் உயர்ந்த ரக நெல் விதைகள், உரங்கள், சாகுபடிச் செலவுக்குப் பணம், பயிர் பாதுகாப்புக் கான பூச்சி மருந்துகள் பெருமளவில் வழங்கப்படு கின்றன. 1960-61ம் ஆண்டில் சுமார் 40 லட்சம் ரூபாய் கடனுக வழங்கப் பட்டது. 1961-62ல் 67½ லட்சம் ரூபாய் கடனுக வழங்கப்பட்டது. தற்சமயம் தஞ்சை மாவட்டத்திலும் ஏக்கர் ஒன்றுக்கு 2122 ராத்தல் நெல் விளைகிறது. இந்த உற்பத்தியை மேலும் கால்பங்கு அதிகரிப்பதே இத்திட்டத்தின் நோக்கம். இந்த அளவு விளைச்சலைப் பெருக்குவது அசாத்தியமானதல்ல. ஏனெனில் கடந்த 10 ஆண்டு களில் நெல் விளைச்சல் போட்டிகளில் ஏக்கருக்கு 8550 ராத்தல் நெல்லை நம் விவசாயிகள் விளைவித் திருக்கின்ருர்கள்.

தென்ஆற்காடு மாவட்டத்தில் நிலக் கடலை உற்பத்தியைப் பெருக்குவதற்காகத் தீவிரச் சாகுபடித் திட்டம் மேற்கொள்ளப் படுகிறது. பண்ருட்டி, குறிஞ்சிப்பாடி, கடலூர் வட்டாரங்களில் இருப தாயிரம் ஏக்கரில் நிலக்கடலை விளைச்சலை 40 சத விகிதம்வரை அதிகரிக்கவேண்டும் என்பது இத்திட் டத்தின் நோக்கமாகும். இதற்கு வேண்டிய விதை,

உரங்கள், பூச்சி மருந்துகள் எல்லாம் கூட்டுறவு சங்கங்கள்மூலம் வழங்கப்படும். இதற்காக நான்கு வருடங்களில் 37½ லட்சம் ருபாய் கடன் உதவி செய்ய ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

பருத்தி உற்பத்தியை அதிகரிக்கவும் ஒரு தீவிரச் சாகுபடித் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. கோவை, சேலம், திருச்சி, மதுரை, இராமநாதபுரம், திருநெல் வேலி மாவட்டங்களில் சுமார் 60,000 ஏக்கர் திட்டத் தினுல் பயனடையும். இதனுல் 15,000 பேல் பஞ்சு கூடுதலாக உற்பத்தியாகும்.

### காய்கறி உற்பத்தி

சென்னை நகரத்திலும் சுற்றுப்புறமுள்ள கிராமங் களிலும் காய்கறி உற்பத்தியை அதிகரிக்க ஒரு திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. இதன்மூலம் போக்கு வரத்துச் சங்கடங்கள் குறையவும், நகருக்கு நல்ல காய்கறிகள் கிடைக்கவும் வழி ஏற்படும். நீலகிரி யில் உருளைக்கிழங்கு உற்பத்தியை அதிகரிக்க ஏற்பாடுகள் நடந்துவருகின்றன. உற்பத்தியைப் பெருக்குவதற்காக, குடியானவர்களுக்கு தேவையான எல்லா உதவிகளையும் அரசாங்கம் தயங்காது செய்து வரும்.

உலகத்தின் கவனம் முழுவதும் நம் நாட்டை நோக்கித் திரும்பி யிருக்கிறது. எந்த நெருக்கடியை யும் தன்னுல் சமாளித்து வெல்லமுடியும் என்பதை இந்தியா புலப்படுத்திக்கொண்டு வருகிறது. நாட்டில் இப்போது உள்ளது போன்ற உணர்ச்சி வேகம் முன்பு என்றுமே இருந்ததில்லை. இந்த உணர்ச்சி வேகம் செயல் வடிவமாகவும் பலன் தரவேண்டும். கழனி

களிலும் ஆலைகளிலும் உற்பத்தியைப் பெருக்கும் பணி புது வேகத்துடன் நடைபெறவேண்டும்.

## நமது பொறுப்பு

இந்த நாடு நம்முடைய நாடு. இதைக் காக்கும் பொறுப்பு நம்முடையது.

தேசீயக் கவிஞர் சொல்லியதுபோல்

> **"நாடு முற்றும் நம்மது**
> **நன்மை தீமை நம்மது**
> **வீடு பெண்டு மக்களை**
> **வேறு காக்க திக்கு யார்?"**

இந்தப் பொறுப்பை உணர்ந்து மக்கள் ஒவ்வொருவரும் செயலாற்ற முற்பட வேண்டும். வளமான நமது நாட்டின் வளத்தை மேலும் பெருக்குவோம். நமது வலிமையை வளர்ப்போம். தேசப் பாதுகாப்புக்கு எல்லா வழிகளிலும் உதவுவோம். வெற்றி நமதே.

# சோதனை நேரத்தில் மக்களின் கடமை

**கா**ஷ்மீரத்தில் பாகிஸ்தான் மீண்டும் அநியாய மான ஆக்கிரமிப்பில் இறங்கி, நம்மீது ஆயுதப் போராட்டத்தைத் திணித்தது. காலமெல்லாம் சமாதானக் கொள்கையைக் கடைப்பிடித்து, உலகுக் கெல்லாம் சமாதான வழி கூறிவந்த இந்தியா, வேறு வழியின்றி, இப்போது ஆக்கிரமிப்பை ஒழிக்க களத்தில் இறங்கிவிட்டது. இந்திய மக்கள் அன்பு வழியில் மட்டுமல்ல. ஆற்றலிலும் சிறந்தவர்கள்; பொறுமையில் மட்டுமல்ல: போரிலும் வல்லவர்கள் என்பதை உலகம் இன்று கண்டு வருகிறது.

அந்நிய நாட்டின் சில பகுதிகளை அபகரிப்பதற் காக இந்தியா இந்தப் போரில் ஈடுபடவில்லை. ஆக்கிர மிப்பைத் தூண்டும் எண்ணம், சக்தி, சாதனம் ஆகியவைகளைத் தகர்க்கவேண்டும் என்பதே இந்தியா வின் நோக்கம். இந்தப் போரில் இந்தியா அடையும் வெற்றி ஒரு நாட்டின் வெற்றிமட்டுமல்ல; தர்மத்தின்

வெற்றியாக அமையும். நியாயத்தின் வெற்றியாக இருக்கும்.

நமது நாடு ஜனநாயக நாடு. இந்த அரசாங்கம் மக்களின் அரசாங்கம். அரசாங்கம் ஆக்கிரமிப்பைத் தடுக்கும் போரில் இறங்கி யிருக்கும்போது மக்கள் ஒவ்வொருவரும் அதில் ஈடுபட்டிருக்கிறுர்கள் என்பதே பொருள். போர்முனையிலே நமது வீரர்கள் உயிரைத் திரணமாக மதித்து வீரப்போர் நடத்திவருகின்றனர். தங்கள் கடமையை யாரும் வியக்கும் வண்ணம் அற்புதமாக நிறைவேற்றி வருகின்றனர்.

போர்முனைக்குச் செல்லும் வாய்ப்பு இல்லாமல் இருக்கும் குடி மக்கள் சாத்தியமான எல்லா வழிகளிலும் போர் முயற்சிகளுக்கு உதவியாகவும் ஆதரவாகவும் இருக்கவேண்டும். உதவியாகப் பணியாற்ற வேண்டும் என்ற துடிப்பும் மக்களிடையே—குறிப்பாக இளைஞர்களிடையே— இருக்கிறது. செயல்படுவதற்குரிய வழி வகைகளை நாம் முறையாக அமைத்துக் கொள்வது அவசியமாகும்.

சோதனையான இந்த நேரத்தில் தேசத்தின் ஒவ்வொரு அங்குல மண்ணையும் காத்து நாட்டின் கீர்த்தியைக் காக்க தீரத்தோடு போராடிக்கொண்டிருக்கும் நமது ஜவான்களின் மன நிலையை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். தங்கள் மனைவி மக்களை விட்டு விட்டு, எல்லா மக்களையும் காப்பதற்காக அவர்கள் செருமுனையில் நின்றிருக்கிறுர்கள். அந்தக் குடும்பங்கள் எந்தவிதமான கவலைக்கும் வசதிக் குறைவுக்கும் ஆளாகாதவாறு, அந்தந்தப் பேட்டை வாசிகள், கிராம வாசிகள் கவனித்துக் கொள்ளவேண்டும். வீட்டிலிருப்பவர்கள் நிம்மதியாக இருக்கிறுர்கள் என்று தெரிந்தால், களத்தில் உள்ள வீரர்கள் தங்கள்

பணியில் இன்னும் முனைந்து ஈடுபடுவார்கள். நாடெங்கும் தீபாவளி வருகிறது. அந்த நாளில் நமது வீரர்களின் மனம் மகிழும்படிச் செய்து நாம் மகிழ்ச்சி காணவேண்டும். தீபாவளிப் பரிசு பெறுவதற்கு முதல் தகுதி உடையவர்கள் நாட்டைக்காக்கும் வீரர்களே ஆவர். பரிசுப் பொட்டலங்கள், புத்தகங்கள், டிரான்சிஸ்டர் ரேடியோ மற்றும் அவர்கள் விரும்பும் இதர பண்டங்களை அனுப்பி வைப்போமானால் நம்மைக் காக்கும் அவர்கள் மனம் மகிழும். நாட்டு மக்கள் அனைவருடைய இதயங்களும் ஒன்றுபடும்.

போர் என்பது ஒரு அழிவு வேலை. எத்தனையோ பொருள்கள் அதில் நாசமாகின்றன. ஆனால் நாடு காக்கவும் மானம் காக்கவும் எந்த நஷ்டமும் பெரிதில்லை. அழிவைப்பற்றிக் கவலைப்படவேண்டிய தில்லை. ஆனால் அதே சமயத்தில் நமது ஆக்கும் சக்தி பல்கிப் பெருகவேண்டும் எதையும் ஈடுகட்டக்கூடிய திறன் வளரவேண்டும். குடிமக்களுக்கு வீரம் காட்ட வாய்ப்பு குறைவே தவிர, உற்பத்தியைப் பெருக்கு வதன்மூலம் நாட்டுப் பணியாற்ற அமோகமான வாய்ப்பு இருக்கிறது. நமது ஆலைகளின் சக்கரங்கள் 24 மணி நேரமும் சுழலவேண்டும்; வேகமாகச் சுழல வேண்டும். வயல்கள் ஒவ்வொரு ஏக்கரிலும் அதிகமான மகசூல் எடுக்கவேண்டும். "அதிகமான உற்பத்தி; குறைவான உபயோகம்; சேதாரமே இல்லை" என்ற இலட்சியத்தை அமுல்படுத்த வேண்டும். விருந்துகள், வைபவங்களுக்கு இது நேரமில்லை என்பதை உணரவேண்டும். ஒவ்வொரு தானிய மணியையும் சேமிக்கவேண்டும். மின்சார சக்தி நமது தொழிற்சாலைகளுக்கு ஏராளமான அளவில் தேவைப் படுகிறது; பெட்ரோல் எண்ணெய் தேச பாதுகாப்புச் சாதனங்களுக்கு இன்றியமையாத ஒன்று. இவை

களின் உபயோகத்தை வெகுவாகக் குறைக்கவேண்டும். எந்த உபயோகப் பொருளானாலும் நமது படை வீரர்களின் தேவை முதலிடம் பெறவேண்டும். அந்த அளவுக்கு நமது உபயோகத்தைக் குறைக்கவேண்டும்.

இஞ்சினீயர்கள், டாக்டர்கள் முதலானோர் இன்று பாதுகாப்புப் பணிகளுக்கு ஏராளமான அளவில் தேவைப்படுகின்றனர். நாட்டுக்குச் சேவை செய்ய இவர்களுக்கு இதைக்காட்டிலும் பொன்னான வாய்ப்பு வேறு இல்லை. இளைஞர்கள், கல்வி கற்கும் நிலையில் இருந்தாலும் சரி, வேறு தொழிலில் இருந்தாலும் சரி, நாட்டுச் சேவைக்கு தங்கள் ஆர்வத்தை வளர்க்க வேண்டும். அதற்கான பயிற்சிகளைப் பெறுவதில் கவனம் செலுத்துவதும் முக்கியமாகும்.

ஒரு தேசத்துக்குப் பெருமை அதன் பரப்பளவிலும் வளங்களிலும் மட்டுமில்லை, மக்கள் ஒவ்வொருவர் இயல்பிலும் மனத்திலும் அது பொதிந்திருக்கிறது. தேச நலனுக்காக எதையும் தியாகம் செய்யும் பண்பை வளர்த்துக் கொள்ளவேண்டும். சுயநலப் பேராசைகளை அறவே ஒழிக்கவும், சேவை மனப்பான்மையை வளர்க்கவுமான சூழ்நிலைகளை உறுதிப் படுத்த வேண்டும்.

நாட்டின் பாதுகாப்பைக் கருதி அரசினர் மேற்கொள்ளும் ஒவ்வொரு நடவடிக்கையிலும் மக்கள் மனமார ஒத்துழைப்பது அவசியமாகும். இரவு 9 மணிக்கு இருட்டடிப்பு என்றால், ஒரு வீடு, ஒரு இடம் பாக்கியில்லாமல் அதை அனுசரித்துக் காட்டி, நமது ஒழுங்குணர்ச்சியைப் புலப்படுத்த வேண்டும். சொல்லிய வண்ணம் செய்யக்கூடிய மக்கள் என்பதை காண்பிக்க வேண்டும்.

நமது போலீஸ் படையினருக்கு, தேசப் பாது காப்பு அலுவல் சம்பந்தமாக எவ்வளவோ பணிகள் இருக்கின்றன. எனவே மக்கள் தங்களிடையே தகராறுகளுக்காக போலீசாரை நாடும் நிலைமை இருக்க லாகாது. ஒழுங்கு முறையோடு காரியங்களைச் செய்வது மூலம் போலீசாரின் பணியில் உதவ வேண்டும். ஒவ்வொரு சொல்லிலும் செயலிலும் மக்கள் பொறுப்புணர்ச்சியைக் காட்ட வேண்டும். பீதிகளைக் கிளப்புவதற்கோ, வேண்டாத வியாக் யானங்களைக் கிளப்புவதற்கோ இடம் தரக்கூடாது. முறையாகக் கிடைக்கும் உண்மைச் செய்திகளை மட்டுமே எடுத்துரைக்க வேண்டும். நமது எண்ணம், பேச்சு, செயல் ஒவ்வொன்றிலும் நம்பிக்கை மிளிர வேண்டும்.

போர் நாம் விரும்பாத தொழில். ஆனால் அது நமக்குத் தெரியாத தொழில் அல்ல. அறத்துக்காக அறப்போர், அறத்துக்காக ஆயுதப்போர். இரண்டி லுமே நாம் வல்லவர்கள். நம் இளைஞர்கள் உள்ளத் தில் இளமையிலிருந்தே சிறந்த மரபுகள் வளர வேண்டும். நாள் தோறும் கணந் தோறும் தேச பக்தி, வீர உணர்ச்சி ஊட்டவேண்டும். இன்று நாட்டில் ஏற்பட்டுள்ளஒற்றுமையை வலுப்படுத்த வேண்டும். காந்தியும் நேருவும் வாழ் நாளெல்லாம் பட்டபாடு வீண்பாடல்ல என்பதை உலகம் உணரு மாறு செய்வோமாக. வாழ்க பாரதம். வெல்க சத்தியம்.

# விவசாய உற்பத்தி

இறைவன் அருளால் கிடைக்கிற தண்ணீரை நமது விவசாயிகள் நல்லமுறையில் பயன்படுத்தி உற்பத்தியைப் பெருக்கி வருகிறார்கள். அவர்களுக்கு நமது பாராட்டுதலைத் தெரிவிக்கக் கடமைபட்டுள்ளோம். கிடைக்கிற தண்ணீரை நமது விவசாயிகள் சிறந்தமுறையில் சிக்கனமாகப் பயன்படுத்தி வருகிறார்கள். அதிகாரிகளும். விவசாயிகளும் ஒருவர் கடமையை ஒருவர் புரிந்து கொண்டு பணியாற்றுவதானது நாட்டின் முன்னேற்றத்தில் மிகவும் சிறப்பானதொரு விஷயமாகும்.

## விவசாயிகளின் உழைப்பு

விவசாயிகளின் உழைப்பை நன்கு அறிந்து கொண்டு அவர்களுக்கு வேண்டிய ஒத்தாசைகளையெல்லாம் நமது அரசாங்கம் செய்து வருகிறது. இயற்கையாகக் கிடைத்த தண்ணீரைப் பயன் படுத்தி வருவதோடு நல்ல மாடுகள், பசுந்தாள் உரம் பஞ்சாயத்து யூனியன் வாயிலாக கிடைக்கும் கிராமக் கழிவுப்பொருள் எல்லாம் சேர்த்துக் கொடுத்து அதை

யும் அவர்கள் பயன்படுத்தி விவசாய உற்பத்தியைப் பெருக்க பாடுபட்டு வருகிருர்கள். உற்பத்தியைப் பெருக்குவதில் இப்போது விவசாயிகளுக்கு நல்ல ஆர்வம் வந்திருக்கிறது. முன்பெல்லாம் பல இடங்களில் தரிசு நிலங்கள் கிடக்கும். இப்போது ஒரு சில இடங்களில் தான் தரிசு நிலங்கள் கிடக்கின்றன. இருக்கிற தரிசு நிலங்களையும் பண்படுத்தி விவசாயம் செய்ய வந்திருக்கிருர்கள்.

இலமென் றசைஇயிருப்பாரைக் காணின்
நிலமென்னும் நல்லாள் நகும்''

என்று வள்ளுவர் கூறியிருக்கிருர்

## கூட்டுறவு

நிலத்தை நன்கு பண்படுத்த விவசாயிகள் முன் வந்திருக்கிருர்கள். இன்னும் சில இடங்களில் தரிசு நிலங்கள் இருக்கின்றன. அப்பேர்ப்பட்ட நிலங்களை கூட்டுறவு வாயிலாக அல்லது ஹரிஜன இலாகாவிலிருந்து உதவி பெற்று கூட்டுப் பண்ணை வைத்து உற்பத்தியைப் பெருக்க அரசாங்கம ஏற்பாடு செய்து வருகிறது.

விவசாயிகளுக்கு இருக்கும் ஊக்கமும் ஆர்வமும் போற்றத் தக்கவையாகும். எவ்வளவுதான் உற்பத்தி செய்தாலும் விவசாயப் பொருள்களுக்கு உழைப்பிற்குத் தகுந்த ஊதியம் என்பது போல் அவர்கள் உழைப்பை மனத்தில் கொண்டு அவற்றிற்கு நல்ல விலை கிடைக்கவேண்டும். இதற்குஏற்பாடுகள்செய்யப் பட்டுள்ளன. விவசாயிகளுக்கு அதிக விலை கிடைக்கும் போது வாங்கி உண்பவர்களுக்கும் தங்குதடையின்றி கிடைப்பதற்கு உதவி செய்ய வேண்டியிருக்கிறது.

## நெல்லூர் அரிசி

நெல்லூர் அரிசி சாப்பிடுகிறவர்களுக்கு, அது கிடைப்பதில்லை என்று சிலர் வருந்துகிறார்கள். நெல்லூர் அரிசி சாப்பிடுகிறவர்களை மட்டும் நாம் பார்த்து விட முடியாது. லட்சோபலட்சம் ஏழை மக்களுக்கும் உண்ண உணவு வேண்டும். அதற்குத்தான் நாம் பாடு பட்டுவருகிறோம். நல்ல அரிசி கிடைக்கும்போது அவர்களுக்கும் கிடைக்க கூட்டுறவு மூலமாகவோ அல்லது வியாபாரிகள் மூலமாகவோ உதவி செய்து வருகிறோம். ஒரு சில வியாபாரிகளுக்கு வேண்டு மானால் மனம் மாறாது இருக்கலாம். பெரும் வியாபாரிகள்,தாம்பணம் சம்பாதிக்க வேண்டும் என்று நினைக்கலாம். அதற்காக எல்லோரும் மோசமான வர்கள் என்று கூறிவிட முடியுமா?

## கருநாகமா?

வியாபாரிகள் எல்லோரும் கருநாகம் போன்ற வர்கள் என்று சிலர் கூறுகிறார்கள். எல்லோரையும் அப்படிச் சொல்லிவிட முடியாது. வியாபாரிகள் வர்க் கத்தையே கருநாகம் என்று சொல்வது சரியல்ல.

பஞ்சாயத்துப் பகுதிகளில் விவசாயத்திற்காக நல்ல முறையில் உரம் தயார்செய்து வருகிறார்கள். குறிப்பாக கிராமங்களிலுள்ள கழிவுப் பொருள்களை யெல்லாம் ஒன்று சேர்த்து கம்போஸ்ட் உரம் சேகரிக்க வேண்டும் என்பதற்காக பல லட்சக்கணக்கானருபாய் கள் ஒதுக்கி செலவுசெய்து வருகிறோம். மத்திய அரசாங்கமும் இதற்கு ஒத்துழைத்து வருகிறது. இவ்வாறு செய்வதன்மூலம் கிராமங்கள் எல்லாம் சுத்தமாகின்றன. அதோடு கம்போஸ்ட் உரத்தை

உபயோகிப்பதன்மூலம் உணவு உற்பத்தியும் பெருகு கின்றது. இந்தக் 'கம்போஸ்ட்' உரம் தயார் செய்வதில் பஞ்சாயத்துக்கள் நல்ல முறையில் ஈடுபட்டிருக் கின்றன. இது மகிழ்ச்சிக்குரியதாகும்.

### சிறு பாசனம்

சிறுபாசனத் திட்டத்தின் கீழ் மத்திய அரசாங்கம் நமது மாநில அரசாங்கத்திற்கு அதிகமான அளவில் உதவி செய்துவருகிறது. இதன் மூலம் பல இடங் களில் செப்பனிடுவதற்கு வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது. ஏற்கனவே செப்பனிடப்படாமல் இருந்த இடங்களை யெல்லாம் செப்பனிட்டு, விவசாயப் பெருமக்கள் நல்ல முறையில் பயிர் சாகுபடி செய்ய வகை செய்யப் பட்டுள்ளது.

பஞ்சாயத்து யூனியன்கள் மூலமாக நல்ல பல திட்டங்களைப் போட்டு அதற்காக பணம் ஒதுக்கி, அதன் வாயிலாக உணவு உற்பத்தியைப் பெருக்கு வதற்கும் வசதிசெய்யப்பட்டுள்ளது. பஞ்சாயத்துக்கள் மூலமாக நல்ல முறையில் கழிவுப் பொருட்கள் எல் லாம் ஒன்று சேர்க்கப்படுவதன் காரணமாக கிராமம் சுத்தமாக இருப்பதற்கு வேண்டிய நிலைமை ஏற்படு கிறது. முக்கியமாக, தெருக்களில், குப்பைகள் சேராமல் அந்தக் குப்பைகள் எல்லாம் நல்ல முறையில் சேகரிக்கப்பட்டுவிடும். சாதாரணமாக மழை காலத் தில் தான் இந்தக் கழிவுப்பொருட்கள் அடித்துச் செல்லப்படும். இப்போது அப்படி அல்லாமல், காலா காலத்தில் கூட்டி ஒன்றுசேர்ப்பதில் பஞ்சாயத்துக்கள் எல்லாம் அதிக அக்கறை எடுத்துக்கொள்கிறது.

இப்போது கிராமங்கள் எல்லாம் சுத்தமாக இருக் கின்றன. கண்ட இடத்தில் மலசலம் கழிக்காமல்

கண்ட இடத்தில் குப்பைகள்கொட்டாமல் கம்போஸ்ட் உரம் தயாரிக்க பஞ்சாயத்துக்கள் அக்கரை எடுத்துக் கொள்ள வேண்டும். இதற்கான உதவிகளை அர சாங்கம் வழங்குகிறது.

**பாசன வசதி**

முன்பு ஆயக்கட்டுகள் அதிகம் கிடையாது. இப் போது பலவேறு துறைகளின் கீழ் பாசன வசதியைப் பெருக்கி இருக்கிறோம்.

நமது நோக்கம் விவசாயத்தைப் பெருக்க வேண் டும் உற்பத்தியைப் பெருக்க வேண்டும் என்பதுதான்.

காங்கிரஸ் மகா சபை இன்று நேற்றல்ல ஆரம்ப முதலே விவசாயிகளுக்காகத் தான் பாடுபட்டு வருகிறது. அதற்காகப் பல போராட்டங்கள் கூட நடத்தியிருக்கிறோம். அதுமட்டுமல்ல, விளைச்சலில் பாட்டாளி மக்களுக்கு அதிகமான பாகம் கொடுக்கப் பட வேண்டுமென்ற முறையில் தஞ்சை ஜில்லா பண்ணையாள் சட்டத்தை அரசாங்கம் கொண்டு வந்தது. உழைப்பவனுக்கு நிலம் சொந்தம் என்ற முறையில் ஜமீன் ஒழிப்புச் சட்டம் கொண்டுவந்தோம். ஜமீன் நிலங்களில் கஷ்டப்பட்டுக் கொண்டிருந்தவர் களுக்கு அயன் கிராமம் மாதிரி பட்டா செய்துகொடுத் தோம். அவர்கள் தற்போது மகிழ்ச்சியுடன் இருக் கிறார்கள். கோயிலுக்குச் சொந்தமான நிலங்களையெல் லாம் கூட்டுறவு முறையில் எடுத்துக்கொண்டு விவ சாய உற்பத்தியை அதிகம் ஆக்குகிறோம். தனிப்பட்ட வர்கள்கூட கூட்டுறவு முறையில் விவசாயம் செய்ய வந்தால் உதவி செய்கிறோம். அதோடு தரிசு நிலங் களையெல்லாம் எடுத்து கூட்டுறவு முறையில் செய

லாற்ற கிணறு வெட்டி, மாடு வாங்கிக் கொடுத்து, உரம் கொடுத்து விவசாயிகள் கூட்டுறவு முறையில் விவசாயம் செய்ய ஏற்பாடு செய்கிறோம்.

குறிப்பாக விவசாயத் துறைக்காக ஹரிஜன நலத் துறையில் இருந்தும் கூட்டுறவு முறையில் நடத்த பல லட்சக்கணக்கான ரூபாய் செலவு செய்துகொண்டு வருகிறோம்.

# நமது தலைவர்

தலைவர்களால் உருவாக்கப்படுவதும், தலைவர்களை உருவாக்குவதுமே ஒரு நாட்டின் சுதந்திரப் போராட்டம். காந்திஜி, லாலா லஜபதிராய், பால கங்காதர திலகர், மோதிலால் நேரு போன்ற அரும்பெரும் தலைவர்கள் உருவாக்கியதே பாரத நாட்டின் சுதந்திரப் போராட்டம். அது பல வீர இளைஞர்கள் மனதில் வேரூன்றி, அவர்களை தேச விடுதலைப் பணியில் ஈடுபடச் செய்தது. அவர்களுள் ஒருவரே நம்மருந் தலைவர் காமராஜ்.

இளவயதிலேயே அரசியலில் ஈடுபட்டவர் நம் தலைவர். அவ்வாறு அவர் ஈடுபட்ட காலத்தில் அரசியல் என்பது வாயளவில் இல்லாமல், எதுவும் செயலளவில் இருந்தது. வாய்ச் சொற்களைவிட, சாதனைத்திறம் கொண்டவர்களே காங்கிரஸ் மஹா சபைக்கு அதிகஅளவில்தேவைப்பட்டார்கள். ஏனெனில் பலம் வாய்ந்த ஒரு அந்நிய சாம்ராஜ்யத்தை எதிர்த்து நிற்பதற்கு செயல் திறம்தான் முக்கியமல்லவா? இத்தகைய செயல் திறம் கொண்டவர்தான் காமராஜ். அன்று தொண்டர்களுக்குள் ஒரு தொண்டராக இருந்

தவர், படிப்படியாக உயர்ந்து, இன்று தலைவர்களுக்கு ஒரு தலைவராகத் திகழ்வதற்குக் காரணம் அவரது செயல்திறமும், அயராத உழைப்புமேயாகும்.

## தேசப் பற்று

திரு. காமராஜை ஆகர்ஷித்தது தேசப்பற்று. ஆனால் அவரை வழி நடத்திச் சென்றது காந்தீயம். இன்று அமைதியும், ஆழ்ந்த சிந்தனையும் அவரது குணாதிசயங்களாகத் திகழ்கின்றன. இதற்குக் காரணம் — அல்லது அடிப்படை — காமராஜ் அரசியலில் பிரவேசித்த காலத்திலிருந்து அவர் காந்திஜியின் சாத்வீகத் தர்மத்தின் மேல் கொண்ட பற்றும், நம்பிக்கையும் தான். இயற்கையாகவே இளமையில் இருக்கும் துடிப்பும், வேகமும் அன்று இவருடம் இல்லை என்றுசொல்ல முடியாது. ஆனால் காந்திஜியை லட்சிய புருஷராக ஏற்றுக் கொண்ட உள்ளத்தை அந்த இளமை வேகங்கள் ஆக்ரமிக்க முடிய வில்லை என்றே சொல்லவேண்டும்.

திரு. காமராஜ் அரசியலில் பிரவேசிக்கும் நேரத்தில் உற்றார் உறவினர்கள் அவருக்குப் பெரும் தடைகள் போட்டார்கள். ஆனால் அந்தத் தடைகளை யெல்லாம் மீறிவிட்டு, தமது விருப்பு, வெறுப்புகளுக்கு மட்டுமே இடமளித்து, அன்று அவர் தேச சேவையில் ஈடுபட்டார். இன்று தமது விருப்பு, வெறுப்புகள் அனைத்தையும் துறந்துவிட்டு, தமிழ் மக்களின் அபிலாஷைகளை, அவர்களது எதிர்காலக் கனவுகளை, மனமார ஏற்று அவைகளை நிறைவேற்றிக் கொண்டு வருகிறார்.

## ஒரே உறவு—அன்னை

நிர்வாகம்நடத்தும் தலைவர்களுக்கென கிரீஸ்நாட்டு அரசியல் ஞானி பிளாட்டோ ஒரு விளக்கம் சொன்னார்.

"குடும்பம், சுற்றம், உறவு ஜனங்கள் இல்லாத தலைவன் ஆட்சி செய்தால், அந்த ஆட்சியில் குறைகள் படிப்படியாகக் குறைந்து கொண்டு வரும்" என்றார் அவர். நம் தலைவருக்கு இன்றுள்ள ஒரே உறவு — ரத்தத் தொடர்புள்ள ஒரே உறவு — அவரை ஈன்றெடுத்த அருமை அன்னையார்தான். மற்றபடி அவரது சொந்த வீடு பரந்த இந்த தேசமாகும். இங்குள்ள மக்கள்தான் அவருக்குள்ள உறவினர்கள். அவர்களுக்காகப் பாடுபடுவது ஒன்றே அவரது லட்சியம்.

திரு காமராஜ் காந்திஜியின் உண்மையான சீடர் என்பதற்கு முக்கியமான ஒரு உதாரணம் உண்டு. காந்திஜிக்கு, எல்லாவற்றுக்கும் மேலாக, கிராமங்கள் மீதும், கிராம மக்கள் மீதும் ஒரு தனி அன்பு உண்டு. அதேபோல் காமராஜ் அவர்களுக்குக் கிராம மக்களிடம் ஒரு தனி பரிவு இருகிறது. அந்நிய ஆட்சியின்போது, வாழ்க்கையில் சகல விதங்களிலும் நொந்து போனவர்கள் கிராம மக்கள். ஆயினும் இந்தியாவின் பலத்துக்கு ஒரு முதுகெலும்பாகத் திகழ்ந்தவர்கள், திகழ்பவர்கள் அவர்கள். அப்பேற்பட்ட அவர்களைக் காணும்பொழுதும், அவர்கள் மத்தியில் இருக்கும் பொழுதும் காமராஜ் ஒரு புதுச் சக்தியே பெறுகிறார் என்று சொல்லவேண்டும்.

**கிராமங்களில் வளர்ச்சி**

அதனால்தான் இன்றைய அவரது ஆட்சியில் நிறைவேற்றப்படும் பல திட்டங்களில் கிராம வளர்ச்சி முதலிடம் பெற்றிருக்கிறது. அதற்கேற்ப கிராமங்களில் மகத்தான வளர்ச்சியும் ஏற்பட்டிருக்கிறது. கிராமங்களுக்கு மின்சார விஸ்தரிப்பு, கிராமக் கூட்டுறவுச் சங்கங்களுக்கு அரசாங்க உதவி, கிராமங்களில்

கல்வி வளர்ச்சி, பள்ளிப் பிள்ளைகளுக்கு இலவச நண்பகல் உணவுத் திட்டம் — இவையெல்லாம் கிராம மக்கள் சமுதாயத்துக்குப் புத்துயிர் தந்திருக்கின்றன.

திரு. காமராஜின் வளர்ச்சி, இரண்டு விஷயங்களை சந்தேகத்துக்கு இடமில்லாமல் நிரூபிக்கின்றன.

''ஆக்கம் அதர்வினாய்ச் செல்லும் அசைவிலா
ஊக்க முடையான் உழை''

என்றார் வள்ளுவர் பெருமான். அயராத உழைப்பாளியை நோக்கி வெற்றியும், புகழும் வழி கேட்டுக் கொண்டுபோகும். இதன்படி திரு. காமராஜ் அவர்களுக்கு அகில இந்தியாவும் பெருமதிப்பளிக்கிறது. மற்றொரு உண்மை என்னவென்றால் மக்கள் நலனுக்குப் பாடுபடும் ஒருவர். குடியாட்சியில் எந்த அளவுக்கும் உயரலாம் — உயர்வதற்கு வாய்ப்பு இருக்கிறது என்பதாகும். இந்திய நாட்டில் குடியாட்சித் தத்துவம் பெற்றிருக்கிற வளர்ச்சிக்கு திரு காமராஜ் ஒரு எடுத்துக் காட்டே ஆவர்.

## தோன்றாத் துணை

அது மட்டுமல்ல. முயற்சி உடையவர்களுக்கு அவர் ஒரு நம்பிக்கை. தொழிலாளர்களுக்கு அவர் ஒரு தோன்றாத்துணை. சோம்பித்திரியும் மெத்தனக்காரர்களுக்கு அவர் ஒரு தூண்டுகோல். முன்னேறத் துடிக்கும் சமுதாயத்துக்கு அவர் ஏற்றதொரு தலைவர்.

அந்தத் தலைவரின் கீழ் ஒன்றுகூடி நாட்டை மேம்படுத்துவோம்!

